KALKI
.7.2006 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் களிக்க...



"..இனி என் முறை!"



பலிக்குமா கனவு?




# வருகிறார் சுற்றுலா

அ.தி.மு.க. ஆட்சியில் நான்காண்டுகள் சுற்றுலாத் துறை அமைச்சராக இருந்தவர் மில்லர்.

"சுனாமி, வெள்ளம் என்று சுற்றுலாப் பயணிகளை மிரளச் செய்யும் வகையில் இயற்கைச் சீற்றங்கள் இருந்தாலும், சுற்றுலாப் பயணிகளைக் கவருவதில் நாட்டிலேயே, தமிழ்நாடு இரண்டாவது இடத்தை அம்மா ஆட்சியில் எட்டியது" என்கிறார் மில்லர்.

"1996 - 2001 தி.மு.க. ஆட்சியில் சுற்றுலாத் துறைக்குச் செலவழிக்கப்பட்டது 17 கோடிதான். ஆனால், அம்மா ஆட்சியில் 140 கோடி செலவிட்டோம். கொடைக்கானல், மதுரை, கன்னியாகுமரி, திருவண்ணாமலை, வேளாங்கண்ணி, கங்கை கொண்ட சோழபுரம், பூம்புகார் ஆகிய சுற்றுலாத்தளங்களில், பயணிகளுக்கான வசதிகள் மேம்பாடு செய்யப்பட்டன. ஒகேனக்கலில் வணிக வளாகம் கட்டினோம். ஊட்டியில் பல சிறப்புத் திட்டங்கள் போடப்பட்டன. கூடுதல் படகுக் குழாம், நவீனக் கழிப்பிடங்கள், உயர் மின்கோபுரம் என்று பல வசதிகள் செய்யப்பட்டன. வழக்கமான சுற்றுலாத் தலங்கள் தவிர, இயற்கை எழில் கொஞ்சும் ஏலகிரி, கல்வராயன் மலை, பச்சை மலை, கொல்லிமலை, செங்காட்டுப்பட்டி ஆகியவை சுற்றுலாத் தலங்களாக அபிவிருத்தி செய்யப்பட்டன. பல சுற்றுலாத் தலங்களில் பெரிய குளங்கள் சீர் செய்யப்பட்டு, சவாரிக்காகப் படகுகள் விடப்பட்டன.

வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளுக்கு ஓட்டலில், விற்பனை வரியில் சலுகைகள் வழங்கப்பட்டன. ஸ்கால் என்ற வெளிநாட்டு நிறுவனம், 64-வது சர்வதேசச் சுற்றுலா மாநாட்டை சென்னையில் நடத்தியது ஒரு சிறப்பு. சுற்றுலாத் துறை அறிமுகப்படுத்திய நவக்கிரக மற்றும் அம்மன் சுற்றுலா, மக்களிடையே பெருத்த வரவேற்பைப் பெற்றது. 2001-2006ம் ஆண்டுகளில் சுற்றுலாத் துறைக்கு அம்மா தலைமையில் இருந்த தமிழக அரசு கொடுத்த ஊக்கத்தின் காரணமாக ஒரு சர்வதேச விருதும், இரண்டு தேசிய விருதுகளும் கிடைத்தன. பார்க்கத்தானே போகிறோம், இவர்கள் ஆட்சியில் என்ன கிடைக்கப் போகிறதென்று" என்று மில்லர் மீசை முறுக்க, என்ன சொல்கிறார் தி.மு.க. அரசின் சுற்றுலாத் துறை அமைச்சர் சுரேஷ்ராஜன்?

* மில்லர்



"இன்னமும் மக்களால் அதிகம் அறியப்படாத சுற்றுலாத் தலங்களை, மேம்பாடு செய்வதும், சுற்றுலாத் துறையில் தனியார் துறையின் பங்களிப்பை அதிகப்படுத்துவதும்தான் கலைஞர் அரசு சுற்றுலாத் துறையைப் பொறுத்த

மட்டில் செயல்படுத்தப் போகும் முக்கிய அம்சங்கள். இது பற்றி மெகா திட்டம் ஒன்று உருவாகி வருகிறது. சுருளி நீர்வீழ்ச்சி, பிச்சாவரம், கழுகுமலை ஆகிய இடங்களை அபிவிருத்தி செய்யவிருக்கிறோம். சென்னை - மாமல்லபுரம் - காஞ்சிபுரம் என்பது ஒரு சுற்றுலா வட்டம். இந்த வட்டாரத்தில் உள்ள தலங்களை மேம்பாடு செய்ய ஐந்து கோடியில் திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன. சில மாநிலங்களில் சுற்றுலாத் துறையை மேம்படுத்த Brand Ambassador என்று பிரபல சினிமா நட்சத்திரங்களை நியமித்திருக்கிறார்கள். அதேபோல் 'சுற்றுலாத் தூதர்' ஒருவரை கலைஞர் அரசும் நியமிக்கவிருக்கிறது.

உள்நாட்டுச் சுற்றுலாப் பயணிகளைக் கவரும் வகையில் பல திட்டங்கள்

# தூதர்!

* சுரேஷ்ராஜன்



திட்டப்படுகின்றன. முருகனின் அறுபடை வீடு சுற்றுலா, ஆதிசங்கரர் சுற்றுலா என்று விட இருக்கிறோம். தற்போது மிக பாப்புலராய் இருப்பது மெடிக்கல் டூரிஸம். மருத்துவ சிகிச்சை ப்ளஸ் சுற்றுலா என்று வருகிறவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்த தகுந்த நடவடிக்கை எடுக்கப்படும். மற்றும் சாகஸ விளையாட்டுகளை நடத்தி, சுற்றுலாப் பயணிகளைக் கவரும் திட்டமும் உள்ளது. குமரியில் கலைஞர் அவர்களால் வைக்கப்பட்ட திருவள்ளுவர் சிலை மற்றும் அதன் சுற்றுப்புறங்களை ஜெயலலிதா ஆட்சியில் சரியாகப் பராமரிக்கவில்லை. இப்பொழுது நாங்கள் சிறப்பு கவனம் எடுத்து, கடற்காற்று மற்றும் உப்புத் தண்ணீரால் சிலைக்கு எதிர்காலத்தில் எந்தப் பாதிப்பும் வரக்கூடாது என்று தீவிர பராமரிப்புப் பணிகளை மேற்கொண்டு வருகிறோம்'' என்கிறார் சுரேஷ்ராஜன்.

- கௌசி

படம்: ராஜன்




**கல்கி**

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்
ச. கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இண்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



மூன்றாவது அணி என்பது வோட்டைப் பிரிப்பதைத் தவிர வேறெதையும் உருப்படியாகச் செய்ததில்லை என்கிற வரலாற்றுப் பின்னணியில் ஜெ. விடுத்துள்ள அறை கூவலுக்கு அர்த்தம் என்ன...? பல்வேறு தலைவர்களிடம் கேட்டோம்.

# 3வது அணி...

"இந்திய அரசியலில் சுதந்திரம் கிடைத்த நாள் முதல் இன்று வரை மூன்றாவது அணி என்ற ஒன்று உருப்பெற்று, உருப்படியான அரசியல் சாதனைகள் ஏதும் நிகழ்த்தியதாக வரலாறு இல்லை. 1977-ல், ஜனதா கட்சி என்ற குடையின் கீழ் கம்யூனிஸ்ட் அல்லாத காங்கிரஸ் எதிர்ப்புக் கட்சிகள் நெருக்கடி நிலையை எதிர்த்த ஒரே காரணத்துக்காக மக்கள் ஆதரவைப் பெற்று, ஆட்சியில் அமர்ந்தாலும், விரைவிலேயே அவற்றின் சுயநல முகம் வெளிப்பட்டது. அதனால் ஏற்பட்ட குழப்பங்கள் காரணமாக அந்த முயற்சியே குறைப் பிரசவமாக முடிந்து போனது சரித்திரம். அதன் பிறகு தேசிய அளவில் காங்கிரஸ் தலைமையில் ஓர் அணியும், பா.ஜ.க. தலைமையில் ஓர் அணியும் எதிரெதிராகக் களத்தில் நிற்பதையே நாம் காண்கிறோம். இன்னும் சொல்லப் போனால், மதவாத எதிர்ப்பு என்ற அடிப்படையில், கம்யூனிஸ்ட்டுகள் கூட காங்கிரசுடன்தான் கைகோத்து நிற்கிறார்கள். இந்தச் சூழ்நிலையில் சில போராட்டங்கள் நடத்தவும், காங்கிரஸ் கட்சிக்கு எதிராக மக்கள் உணர்வினைத் தூண்டி விடவும் மூன்றாவது அணி என்ற பெயரில் சிலர் முயற்சி செய்கிறார்கள். ஆனால், காங்கிரஸ், பா.ஜ.க. என்ற இரண்டு வலுவான அணிகள் எதிரெதிராகக் களத்தில் நிற்கிறபோது, மூன்றாவது அணியை மக்கள் முகம் திருப்பிப் பார்க்காமல் ஒதுக்கி விடுவார்கள் என்பதுதான் யதார்த்தம்" என்று அழுத்தம் திருத்த மாகச் சொன்னார் காங்கிரஸ் கட்சியின் தமிழருவி மணியன்.

தமிழக பா.ஜ.க.வின் மகளிர் அணித் தலைவியான லலிதா சுபாஷும், காங்கிரஸ் கட்சியின் கருத்துடன் ஒத்துப் போகிறார். "முலாயம்சிங், சந்திரபாபு நாயுடு, ஜெயலலிதா போன்றவர்கள்தான் மூன்றாவது அணி பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார் கள். போட்டி என்றாலே, ஜெயிக்கப் போவது நம்பர் 1 அல்லது நம்பர் 2தான். அரசியலுக்கும் அது பொருந்தும். மூன்றாவது அணிக்கு அரசியல் பந்தயத்தில் இடமே கிடையாது. சிலருடைய அதீத கற்பனை, ஆசைகள்

காரணமாக மூன்றாவது அணி பற்றிப் பேசப்படுகிறது. மூன்றாவது அணி, தோன்றாத அணி!" என்றார்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மூத்த தலைவரான நல்லகண்ணு "குறைந்த பட்ச பொதுத்திட்டத்தின் அடிப்படையில் காங்கிரஸ் கூட்டணிக்குக் கம்யூனிஸ்ட்டுகள் ஆதரவு அளிக்கிறார்கள். ஆனால், அதை மத்திய அரசு மீறும் சம்பவங்கள் அடிக்கடி நிகழ்கின்றன. தவிர, மக்களைப் பாதிக்கும் முடிவுகளை மத்திய அரசு எடுக்கும்போது, அதற்கு ஆதரவு தருவது நடக்காத காரியம். எங்களைப் பொறுத்தவரை பொருளாதாரக் கொள்கை அடிப்படையில் காங்கிரசுக்கும், பா.ஜ.க.வுக்கும் வித்தியாசமில்லை. எனவே காங்கிரஸ் மற்றும் பா.ஜ.க.வுக்கு மாற்றாக ஓர் அணி மிகவும் அவசியம்.

ஆனால், தேர்தல் இல்லாத தற்போதைய சூழ்நிலையில், மூன்றாவது அணி குறித்துப் பேசப்பட்டாலும், அது இப்போதைக்கு உருவாகும் சாத்தியமில்லை. காலப்போக்கில் அது நிகழலாம். ஆக, மூன்றாவது அணிக்குத் தேவையும், சாத்தியமும் இருக்கின்றன" என்றார்.



* நல்லகண்ணு

மற்றவர்களது கருத்துக்கள் இவ்வாறிருக்க, அ.தி.மு.க. என்ன சொல்கிறது? டாக்டர் மைத்ரேயனைக் கேட்டபோது, "தேசிய அரசியலில் இரு துருவங்களாக விளங்கும் காங்கிரஸும், பி.ஜே.பி.யும் மாநிலக் கட்சிகளின் அளவுக்குச் சுருங்கிவிட்டதன் காரணமாக ஏற்பட்டுள்ள வெற்றிடத்தை நிரப்ப, மாநிலக் கட்சிகள், தேசிய அளவிலான அரசியலில் பங்கேற்க வேண்டியிருப்பது காலத்தின் கட்டாயம்.



* மைத்ரேயன்

எனவே, மாநிலங்களின் நலனில் அக்கறை கொண்ட பிராந்தியக் கட்சிகளின் கூட்டமைப்பு என்பது, இன்றைய அரசியலின் பரிணாம வளர்ச்சியே ஆகும். இது காங்கிரஸ் மற்றும் பா.ஜ.க.வுக்கு மாற்று அணியாக விளங்கும். அந்த அணியில் இடம் பெறும் வலுவான பிராந்தியக் கட்சிகளின் தலைவர்கள், மாநில நலன்களையும் பேணிக் காத்து, தேசிய நலனையும் பாதுகாப்பார்கள். மூன்றாவது அணி என்பது சாத்தியம். ஜெயலலிதா, சந்திரபாபு நாயுடு, முலாயம்சிங் யாதவ், சரத்பவார் (?!) போன்ற செல்வாக்குமிக்க தலைவர்கள் அந்த அணியின் மூலம் தேசிய அரசியலில் முக்கிய பங்கு பெறப் போவதும் நிச்சயம்" என்றார் மைத்ரேயன்.

தொகுப்பு : **மௌலி**

## ஜெ. கனவு பலிக்குமா?



* தமிழருவி மணியன்

# பத்தவச்சிட்டியே பரட்டை!

வட்டமேஜை

நன்கு படிக்கும் திறன் இருந்தும், வசதியில்லாத காரணத்தால் படிப்பைத் தொடர முடியாமல் தவிக்கும் மாணவர்களுக்கு உதவிக்கரம் நீட்டும் 'கல்கி நினைவு அறக்கட்டளை'க்கு நன்றி.

- ஜே.டி.ஆனந்தன்,
மதுரை

டாக்டர் காமராஜ் தரும் தகவல்கள் மிகவும் அதிர்ச்சிக்குள்ளாக்குகின்றன. விவாகரத்தைத் தடுக்க அவர் கூறும் மணமுன் ஆலோசனை மிகமிகத் தேவை.

- எஸ்.கிருஷ்ணமூர்த்தி,
கொல்லம்

காளிமுத்து 'பழிவாங்கப் பட்டேன்' என்று தற்போது புலம்புவது கடந்த ஆட்சியின் அவலங்களில் ஒன்றாகும்.

- தமிழருவி, குடந்தை

'திருமாவளவனைப் பந்தாடும் திரையுலகம்' படித்தேன். பத்த வைச்சுட்டியே, பரட்டை!

- புனிதா கோபாலகிருஷ்ணன், வேலூர்

முக்கூராரின் 'குறையொன்றுமில்லை'யில் நரசிம்மரின் பெருமைகளை எத்தனை முறை படித்தாலும் அலுப்பு தட்டுவதில்லை. அழகுத் தமிழில் சிறப்பாக அமைந்துள்ள இந்தத் தொடர், கல்கியின் மகுடத்தில் விளங்கும் நல்முத்து!

- இராமச்சந்திரன், புனே

ரேவதியின் 'பரிதவிப்பு', கடைசி பக்கத்தில் வெளியான முதல் தரமான கவிதை.

- அ.முரளிதரன், மதுரை

'கலைஞரும், விமர்சனமும்' கட்டுரை மிகச் சரியே. அண்மைத் தேர்தலில் தி.மு.க. கூட்டணிக்கு வாக்களித்தவன் என்ற முறையில் சொல்கிறேன்.

- ஆர்.ராமசுப்ரமணியன், கோவை

கல்கி 18.06.2006 இதழில் 'தஞ்சை தரணியில் எண்ணெய்ப் பனை' கட்டுரை படித்தேன். மிகவும் தெளிவாக எழுதப்பட்டிருந்தது. ஆனால் Oil Palm மரத்துக்கு 'எண்ணெய்ப் பனை' என்பது சரியான தமிழ்ச் சொல் ஆகாது. இது ஈச்ச மரம் போன்று தோற்றமளிக்கும். ஆண், பெண் பூக்கள் ஒரே மரத்தில் தோன்றும். பனை மரத்தில் ஆண், பெண் மரங்கள் வெவ்வேறு.

- ஆர்.கிருஷ்ணசாமி, சென்னை

(திரு.கிருஷ்ணசாமி கூறியுள்ளதை மறுப்பதற்கில்லை எனினும் 'எண்ணெய்ப் பனை' என்ற சொல் இன்று தஞ்சை விவசாயிகளிடையே வழக்கத்தில் வந்துவிட்டது. காவேரி பாமாயில் நிறுவனப் பிரசுரங்களிலும் இது காணப்படுகிறது.

- ஆர்.)

## படித்தவன் சிந்திக்கிறான்; சிந்தித்தவன் முன்னேறுகிறான்

**சாகசம், வீரம், காதல், சோகம், பரபரப்பு, திகில், மகிழ்ச்சி, அற்புதம்**

### கோட்டயம் புஷ்பநாத்
தமிழில் **சிவன்**

| | | |
|---|---|---|
| 1. | தேவ மோகினி | 54.00 |
| 2. | அர்த்த ஜாம மோகினி | 67.00 |
| 3. | மந்திரமோகினி | 60.00 |
| 4. | பேய் பங்களா | 91.00 |
| 5. | மோகினியின் காதல் | 60.00 |
| 6. | பதிலுக்கு பதில் | 60.00 |
| 7. | மரைன் டிரைவ் | 60.00 |
| 8. | காதல் மந்திரம் | 80.00 |
| 9. | மந்திர முழக்கம் | 55.00 |
| 10. | மர்ம மாளிகை | 40.00 |
| 11. | மோகினி கோயில் | 50.00 |
| 12. | மோகினி சிலை | 35.00 |
| 13. | கடத்தல் காற்று | 60.00 |
| 14. | மோகினி சபதம் | 85.00 |
| 15. | மாயக் கனவுகள் | 60.00 |
| 16. | அரண்மனை தேவதை | 85.00 |
| 17. | சௌபர்ணிகா | 65.00 |
| 18. | தம்புரான் குன்று | 45.00 |

### வி.ஸ. காண்டேகர்
தமிழில் **கா.ஸ்ரீ.ஸ்ரீ**

| | | |
|---|---|---|
| 1. | எரி நட்சத்திரம் | 66.00 |
| 2. | கண்ணீர் | 80.00 |
| 3. | மனோரஞ்சிதம் | 85.00 |
| 4. | காண்டேகர் கதைகள் I | 50.00 |
| 5. | காண்டேகர் கதைகள் II | 50.00 |
| 6. | காண்டேகர் கதைகள் III | 50.00 |
| 7. | காண்டேகர் கதைகள் IV | 50.00 |
| 8. | கூண்டுக்கு வெளியே | 25.00 |
| 9. | அரும்பு | 25.00 |
| 10. | சுகம் எங்கே? | 55.00 |
| 11. | அமுதக் கொடி | 70.00 |
| 12. | புயலும் படகும் | 50.00 |

### ஜாவர் சீதாராமன்

| | | |
|---|---|---|
| 1. | நானே நான் | 55.00 |
| 2. | உடல் பொருள் ஆனந்தி | 85.00 |
| 3. | மின்னல் மழை மோகினி | 110.00 |

### இது ராஜபாட்டை அல்ல
நடிகர் சிவகுமார்

**ரூ. 165.00**

### தேவதாஸ் – ரூ. 55.00
சரத் சந்திர சாட்டர்ஜி

### சுதாங்கன்

| | |
|---|---|
| தேதியில்லாத டைரி | 36.00 |
| சாய்ந்து கொள்ள தோள் வேண்டும் | 35.00 |

### உலக இலக்கிய வரிசை
தமிழில் **சிவன்**

| | | |
|---|---|---|
| 1. | ராபின் ஹூட் – மேத்யூ ஹாக் | 45.00 |
| 2. | காரமசோவ் சகோதரர்கள் – தாஸ்தயெவ்ஸ்கி | 35.00 |
| 3. | ராபின்சன் குடும்பம் – யோஹன் டேவிட் வைஸ் | 32.00 |
| 4. | இலியட் – ஹோமர் | 45.00 |
| 5. | ஒடிசி – ஹோமர் | 30.00 |
| 6. | பிரபு மாண்டி கிறிஸ்டோ – அலெக்ஸாண்டர் டூமாஸ் | 37.00 |
| 7. | டாம்சாயர் – மார்க் ட்வைன் | 37.00 |
| 8. | அதிசய உலகில் ஆலிஸ் – லூயிஸ் கரோல் | 37.00 |
| 9. | ராபின்சன் குரூசோ – டேனியல் டீஃபோ | 48.00 |
| 10. | மோபிடிக் – ஹெர்மன் மெல்வில் | 45.00 |
| 11. | கலிவரின் பயணங்கள் – ஜோனாதன் ஸ்விஃப்ட் | 40.00 |
| 12. | அன்னகரீனா – லியோ டால்ஸ்டாய் | 35.00 |
| 13. | போரும் அமைதியும் – லியோ டால்ஸ்டாய் | 32.00 |
| 14. | புதையல் தீவு – ஆர். எல். ஸ்டீவென்சன் | 42.00 |
| 15. | இழந்த உலகம் – சர். ஆர்தர் கானன்டாயல் | 32.00 |
| 16. | ஃப்ராங்கென்ஸ்டைன் – மேரி ஷெல்லி | 40.00 |
| 17. | ஹெய்டி – ஜோஹன்னா ஸ்பைரி | 30.00 |
| 18. | காஸ்டர் பிரிட்ஜ் நகர மேயர் – தாமஸ் ஹார்டி | 52.00 |
| 19. | ஆழ்கடலுக்கு அடியில் – ஜூல்ஸ் வெர்னே | 45.00 |
| 20. | டிராகுலா – ஸ்ட்ராம்புரோக்கர் | |
| 21. | ஓஸ் நகரின் மாயாவி – எல். ஃப்ராங்பாம் | 42.00 |
| 22. | உயிர்களின் மூலம் – சார்லஸ் டார்வின் | 46.00 |
| 23. | டாம் மாமாவின் அறை – சார்லஸ் டார்வின் | 42.00 |

### வடுவூர் கே. துரைசாமி ஐயங்கார்

| | | |
|---|---|---|
| 1. | பூர்ணசந்திரோதயம் – 5 பாகங்கள் | 650.00 |
| 2. | கும்பகோணம் வக்கீல் – 2 பாகங்கள் | 200.00 |
| 3. | மாயா விநோதப் பரதேசி – 3 பாகங்கள் | 365.00 |
| 4. | மேனகா – 2 பாகங்கள் | 250.00 |
| 5. | மதன கல்யாணி – 3 பாகங்கள் | 355.00 |
| 6. | சௌந்திர கோகிலம் – 4 பாகங்கள் | 356.00 |
| 7. | வசந்த மல்லிகா | 110.00 |
| 8. | வித்யா சாகரம் | 100.00 |

### ரா.கி. ரங்கராஜன்

| | | |
|---|---|---|
| 1. | நாங்கள் சிரிக்கின்றன | 45.00 |
| 2. | ஹேமா! ஹேமா! ஹேமா! | 60.00 |
| 3. | அழைப்பிதழ் | 65.00 |
| 4. | ராசி | 65.00 |
| 5. | க்ரைம் | 55.00 |
| 6. | கையில்லாத பொம்மை | 60.00 |
| 7. | உள்ளேன் அம்மா | 40.00 |
| 8. | அபாய நோயாளி | 60.00 |
| 9. | ஒளிவதற்கு இடமில்லை பாகம் 1 | 70.00 |
| 10. | பாகம் 2 | 70.00 |
| 11. | ஹூவுஸ்ஃபுல் | 72.00 |
| 12. | புரட்சித் துறவி | 35.00 |
| 13. | ஒரு தற்கொலை நடக்கப் போகிறது | 40.00 |



# “‘தல’ பின்னப்போறார்; இனி என் முறை!”

ஷாலினியின் அண்ணன், அஜீத்தின் மைத்துனர் போன்ற சுலப அறிமுகங்கள் இருந்தாலும் ரிச்சர்டுக்கு அவை மட்டுமே போதுமானதாயில்லை. நாளைய நட்சத்திரமாக மின்ன ஆசைப்பட்டு, 'நாளை' படத்தில் அசத்தியிருக்கிறார். இன்னும் என்னென்னவெல்லாம் ஆசைப்படுகிறார் என்று பார்ப்போமா?

*சினிமா ஆசை?*

"சின்ன வயசிலேயே வீட்டுக்குள்ளே நுழைஞ்சதும் அப்பா கேட்கிற முதல் கேள்வியே 'இன்னைக்கு என்ன படம் பார்த்தே?' என்பதுதான். ஒரு நாளைக்கு மூணு படம்னு இதுவரைக்கும் நான் பார்த்த படங்களோட எண்ணிக்கை மட்டுமே பத்தாயிரத்தைத் தாண்டும். வீட்டுல வேற ஷாலினி, ஷாமின்னு ஏற்கெனவே பெரிய ஸ்டார்ஸ் இருக்காங்க. அதனால சுவாசமே சினிமான்னு ஆயிடுச்சு."

**காதல் வைரஸால பெரிய பாதிப்பா?**

"இயக்குநர் கதிர் - ஏ.ஆர். ரஹ்மான்னு படாடோபமா ஆரம்பிச்ச படம் காதல் வைரஸ். எந்தப் புது முகத்துக்கும் கிடைக்காத ரொம்ப மெச்சூர்டான ரோல் எனக்கு. ஆனாலும் படம் முடிக்கவே ரெண்டு வருஷமாச்சு. என்னால வெளிப்படங்கள் பண்ண முடியலை. போதாத நேரம், படமும் ஃப்ளாப். இதோட விளைவை இன்னைக்கு வரைக்கும் அனுபவிக்கிறேன். இன்னைக்கு பெரிய தயாரிப்பு நிறுவனங்களெல்லாம் பெரிய ஹீரோவோடு படம் பண்ணவே ஆசைப்படறாங்க. என்னை மாதிரி வளர்ந்து வர்ற ஹீரோக்களைக் கண்டுக்கறதேயில்லை. இத்தனை தடைகள் இருந்தாலும் வருங்காலம் நிச்சயம் என்பேர் சொல்லும்."

**நீங்களும் 'நாளை'யில ரௌடி வேஷம்தான் பண்ணணுமா?**

"படம் ஆரம்பிச்சபோது 'நாளை' கதை வித்தியாசமா இருந்துச்சு. தமிழ் சினிமாவை அடுத்த கட்டத்துக்குக் கொண்டுபோகும்னு நினைச்சோம். ஆனா அதுக்குப் பிறகு வரிசையா ஒரே ரௌடி படங்கள்தான். இருந்தாலும் படம் நல்லா போகறதுல சந்தோஷமாயிருக்கு. விமர்சனங்களும் நல்ல விதமா வருது. 'நாளை' மூலமா நல்ல துவக்கம் கிடைச்சிருக்கு. இனி என் முறைதான்!"

**சினிமா பேரடைஸோ?**

"என்கிட்டே ஏகப்பட்ட டி.வி.டி.கள் சேரப் போக, இதையே பிஸினஸா செஞ்சா என்னன்னு, ஆரம்பிச்சதுதான் 'சினிமா பேரடைஸோ'ங்கிற டி.வி.டி. ஷாப். யோசனையோட ஆரம்பிச்ச பிஸினஸ், இப்போ சூப்பரா ஹிட் ஆயிடுச்சு. மணிரத்னம், கமல் எல்லாம் ரெகுலர் கஸ்டமர்கள். சினிமாக்காரர்களைவிட சாதாரண மக்கள்தான் ஆங்கிலப் படங்கள் பார்க்க ரொம்பப் பிரியப்படறாங்க. இப்போ ஹைதராபாத், பெங்களூர்,



# பதுங்கியிருக்கிறது பாய்றதுக்குத்தான்!”

கொல்கத்தான்னு கிளைகள் விரிஞ்சிருக்கு. இந்தத் தொழிலை முதன் முதலா ஆரம்பிக்கிறவங்கதான் ஜெயிப்பாங்க. அந்த அடிப்படையில இந்தியாவோட சினிமா ஆர்வலர்களெல்லாம் எங்க கையில தான்."

**பூஜாவோட...**

"ஆமா. அவங்களோட ஊர் சுத்தறேன்னு கிசுகிசு வந்துச்சு. பூஜா, ஷாலினியோட தோழி. அந்தப் பழக்கத்துல எனக்கும் நண்பியானாங்க. குடும்பத்தோடும் நல்ல பழக்கமானாங்க. அவ்வளவு தான்."

**வீட்டிலிருந்து வர்ற அடுத்த ஸ்டார் ஷாமிலிதானா?**

"எங்க வீட்டுல படிப்பு முடிச்ச பிறகுதான் சினிமாவுக்குள்ளே முழுசா நுழைய விடுவாங்க. ஷாமிலி இப்போ வுமன்ஸ் கிறிஸ்டியன் காலேஜ்ல விஸ்காம் படிக்கிறாள். அவளுக்கு ஹீரோயினாக அவ்வளவா ஆசையில்லை. ஆனாலும் யாருக்கு என்ன விதிச்சிருக்கோ?"

**அஜீத்...**

"நல்ல கதைன்னு நினைச்சி சில படங்கள்ல அவர் ஏமாந்துட்டாரு. ஆனா இப்போ 'தல' கைவசம் அடுத்தடுத்து செமத்தியான கதைகள் இருக்கு. இப்போ அவர் பதுங்கியிருப்பதே பாய்றதுக்குத்தான். வருங்காலத்துல அவருக்குப் போட்டியா உருவாகற அளவுக்கு முன்னேற ஆசை. பார்ப்போம், நிச்சயம் ஒருநாள் ரெண்டு பேரும் கைகோத்து கலக்கலா ஒரு படம் கொடுக்கத்தான் போறோம்."

**மலையாளப் படங்கள் பண்ணலையா?**

"தெலுங்குல நுழைஞ்சு அங்கே பேர் வாங்கியாச்சு. மலையாளத்துல ஒரு படம் பண்ணினேன். என்னோட சொந்த ஊரா இருந்தாலும் கேரளா எனக்கு செட் ஆகலை. தமிழ்ப் படங்களும் சென்னையுமே நமக்குப் போதும்."

**- ச.ந.கண்ணன்**



● 'நாளை' படத்தில் மதுமிதாவுடன் ரிச்சர்ட்...

## வரலாற்றுத் தொடர்ச்சி!



"ஒவ்வொரு தலைமுறையிலும் ஒரு ட்ரெண்ட் செட்டர் அமைவதுண்டு. கவிதையில் எடுத்துக் கொண்டோமானால் அப்படிப்பட்ட ட்ரெண்ட் செட்டர்களாக பாரதியையும், பாரதிதாசனையும் குறிப்பிடலாம். பாரதிதாசனைப் பின்பற்றி ஏராளமான கவிஞர்கள் வந்தனர். அவரை அப்படியே நகல் செய்த கவிஞர்களுக்கு மத்தியில் கவிஞர் சுரதா நிஜக் கவிஞராகத் திகழ்ந்தார். பாரதிதாசனின் செழுமையை உள்வாங்கிக்கொண்டு, தன் சுயத்தோடு கவிதைகள் செய்த படைப்பாளி அவர். கவிஞர், திரைப்படப் பாடலாசிரியர், சாதாரண மனிதன் என மூன்றிலேயும் சிறந்து விளங்கியவர் சுரதா..."

- ஃபிலிம் சேம்பர் வணிக வளாகத்தில் வைரமுத்துவின் கனீர்க்குரல், சுரதாவுக்கு புகழஞ்சலி செலுத்திக் கொண்டிருந்தது. மேடையில் சுரதாவின் புகைப்படத்தைத் திறந்து வைத்து அஞ்சலி செலுத்திய நிதியமைச்சர் க.அன்பழகன், ஆர்.எம்.வீரப்பன், எம்.எஸ்.விஸ்வநாதன் மற்றும் முன்னாள் அமைச்சர் க.ராசாராம் ஆகியோர் அமர்ந்திருந்தனர். அரங்கில் தி.மு.கழகக் கவிஞர்கள் உட்பட சுரதாவின் மீது அன்பும் அபிமானமும் கொண்ட ஏராளமானோர் நிறைந்திருந்தனர்.

சுரதாவின் நட்பு மனப்பான்மையும், கவியுள்ளமும், கவிஞர்களை ஊக்குவிக்கும் பண்பும் பலரால் சுட்டிக்காட்டப்பட்டன.

"யாரிடமும் பகைமை கொள்ளாதவர். தான் ஒரு நாத்திகனாக இருந்த போதும், ஆத்திகர்களைப் புண்படுத்தாதவர். நீண்ட கவிதைப் பாரம்பரியம் கொண்ட தமிழ் மரபில், சுரதா வரலாற்றுத் தொடர்ச்சியின் சின்னம். தமிழக அரசின் சார்பில் பாவேந்தர் விருதை உருவாக்கி, அதை சுரதாவுக்கு வழங்கியதில் நான் மகிழ்ச்சி கொள்கிறேன். கவிஞர்கள், படைப்பாளிகள் தம் கடைசி காலகட்டத்தில் உடல்நலமில்லாமல் போய் மருத்துவமனைக்குப் பணம் கட்ட முடியாத துரதிர்ஷ்டம் வலம்புரிஜானுக்கு நேர்ந்தது. அதே நிலை சுரதாவுக்கும் நேர்ந்திருக்கிறது. இதைத் தவிர்க்க முதலமைச்சர் நிவாரண நிதியிலிருந்து இலக்கியவாதிகளுக்கும் உதவி கிடைத்திட ஆவன செய்ய வேண்டும்" என்று முன்னாள் அமைச்சரும், பிரபல திரைப்படத் தயாரிப்பாளருமான ஆர்.எம்.வீ. வேண்டுகோள் விடுத்தார்.

**- கலாபாரதி**

## வால் நட்சத்திரம்!



'உங்களுடைய குறிக்கோளென்ன?' என்று பத்துப் பேரைக் கேட்டுப் பாருங்கள். டாக்டர், இன்ஜினீயர், பிஸினஸ் மேக்னட், விஞ்ஞானி.... என்று பதில் வரும். ஆனால், 'ஏதாவதொரு புத்தகக் கடையில் சேல்ஸ்மேனாவதுதான் என் லட்சியம்' என்று யாராவது சொல்வார்களா? எழுத்தாளர் சிட்டியின் பன்னிரண்டு வயது லட்சியம் புத்தகக் கடையில் சேல்ஸ்மேனாவதுதான். நிறைய புத்தகங்கள் படிக்க முடியும் என்ற ஆசையே அதற்குக் காரணம்.

புத்தகங்கள் படிப்பதையே வாழ்க்கை லட்சியமாகக் கொண்ட சிட்டி, பின்னாளில் எழுத்தாளராக மலர்ந்ததுடன் 'நடந்தாய் வாழி காவேரி', 'கண்ணன் என் கவி' போன்ற குறிப்பிடத்தக்க புத்தகங்களை எழுதினார். சக எழுத்தாள நண்பர்களுடன் இணைந்து தமிழ் நாவல், தமிழ்ச் சிறுகதை வளர்ச்சி பற்றி

## முன்மாதிரி!



ஒருமுறை மதுரைக்கு மனைவியுடன் சென்றிருந்த சோ.பா., வேலை முடிந்தவுடன் ஊருக்குப் பேருந்தில் திரும்பியிருக்கிறார். பேருந்து நிலையத்தில் இறங்கியவுடன் பக்கத்தில் மதுரைக்குக் கிளம்பத் தயாராக இருந்த பேருந்திலிருந்த நண்பர் ஒருவர் ''கலெக்டர் ஆபீஸ் வேலை. நீங்க வந்தா முடியும் ஐயா'' என்றவுடன் மனைவி எப்படி தனது கிராமத்துக்குச் செல்லப் போகிறார் என்பதைக்கூட மறந்து மதுரைக்கு நண்பருடன் கிளம்பிப் போய்விட்டாராம் சோ.பா! மற்றவர்களுக்கு உதவி செய்வதென்றால் நேரம், காலம் பார்க்க மாட்டார். நடு இரவில் போய் தூங்கிக் கொண்டிருப்பவரைத் தட்டி எழுப்பினால்கூட வந்தவரின் பிரச்னையை முகமலர்ச்சியுடன் கேட்டுத் தீர்வு காண முயல்வார். எப்போதும் பொதுப் பிரச்னையைப் பற்றித்தான் சிந்தனை. முதுகுளத்தூர், கடலாடி தொகுதிகளில் சட்டமன்ற உறுப்பினராக ஐந்து முறை இருந்திருக்கிறார். இந்தப் பகுதிகளில் உள்ள கிராமங்களில் ஏதேனும் சொத்துப் பிரச்னை, குடும்பப் பிரச்னையென்றால் தீர்த்து வைக்க சோ.பா.வைத்தான் கூப்பிடுவார்கள்.

'எடுத்தேன் கவிழ்த்தேன்' என்று தடாலடியாகவோ, மிகவும் மலிவான விளம்பரத்துக்காகவோ எந்தக் காரியத்தையும் செய்ய மாட்டார். 'சட்டமன்ற உறுப்பினர்கள் முன் மாதிரியாகக் கொள்ளப்பட வேண்டியவர் சோ.பா' என்று கலைஞரே அவரைப் பாராட்டியிருக்கிறார்.

1995-ல் தி.மு.க ஆட்சியில் கூட்டுறவுத் தேர்தல்களில் ஆளும் கட்சியினர் பல முறைகேடுகளில் ஈடுபட்டார்கள். அப்போது 'கல்கி'க்கு அது சம்பந்தமாக விரிவான பேட்டியளித்தார் எதிர்கட்சித் தலைவராக இருந்த சோ.பா. அதனைத் தொடர்ந்தும், வழக்கு வந்ததாலும் தேர்தல் ரத்து செய்யப்பட்டது.

பெரிய விபத்தில் சிக்கி, படுத்த படுக்கையாய் 20 மாதங்கள் இருந்தார். சிகிச்சை பலனளிக்கவில்லை. அவர் சட்டமன்ற உறுப்பினராக இருந்த கடலாடி தொகுதி, சோ.பா. மகளுக்குக் கொடுக்கப்படும் என்று மிக நம்பிக்கையுடன் இருந்தது அந்தக் குடும்பம்.

- ஸ்ரீநி

# அஞ்சலி!

பல நூல்கள் எழுதியுள்ளார். தி.ஜானகிராமன், கு.ப.ரா, சோ. சிவபாதசுந்தரம், அண்மைக் காலத்தில் பெ.சு.மணி ஆகியோர் சிட்டியுடன் இணைந்து எழுதியவர்களாவர். முதலில் ஆங்கிலத்தில் எழுதி, பின்பு தமிழுக்கு மாறிய எழுத்தாளர்கள் வரிசையில் சிட்டியும் உண்டு.

பாரதி விவாதம் போன்ற நிகழ்வுகளில் அமரர் கல்கிக்கு எதிரணியில் இருக்க வேண்டிய அவசியம் சிட்டிக்கு ஏற்பட்டது. அதற்குக் காரணம் பாரதியின் மீது சிட்டிக்கு இருந்த நட்புதான்.

அசாதாரணமான இலக்கியவாதியான சிட்டியின் அனுபவங்களைத் தொகுத்து எழுதியுள்ள நரசய்யா, அந்தத் தொகுப்புக்கு 'சாதாரண மனிதன்' என்றே பெயரிட்டிருக்கிறார். அட்டையில் சிட்டியின் படத்துக்குப் பதில் வால் நட்சத்திரத்தின் படத்தையே போட்டிருக்கிறார். வால் நட்சத்திரத்துக்கும், சிட்டிக்கும் என்ன தொடர்பு என்கிறீர்களா? 1910ஆம் ஆண்டு ஏப்ரல் 20 அன்று சிட்டி பிறந்தார். அன்றுதான் தூமகேது எனும் ஹாலி வால் நட்சத்திரமும் பூமிக்குத் தரிசனம் தந்தது!

- சுப்ர.பாலன்

## நீங்கள் கேட்டவை - தராசு

● கு. கணேசன், பனங்கோட்டூர்

***? நஷ்டத்தில் இயங்கி வந்த ரயில்வேயில் பயணக் கட்டணங்களை உயர்த்தாமலே 13,000 கோடி ரூபாய் லாபம் ஈட்டித் தந்த லாலுவை, பெட்ரோலியத்துறை அமைச்சராக்கிவிட்டால் என்ன...?***

! ரயில்வே துறையில் பல்வேறு நிலைகளில் தனியார் பங்கேற்பை அனுமதித்து, அதற்குக் கட்டணங்கள் வசூலித்து, ரயில்வே பொருளாதாரத்தை உயர்த்தியிருக்கிறார் லாலு. இதற்கு அவருடைய திறமை மட்டுமே காரணமல்ல. மத்திய அரசின் பொருளாதாரக் கொள்கை மாறியதும் முக்கிய காரணம். அதேபோல் பெட்ரோலியம் விஷயத்திலும் கொள்கை மாறினால் ஓரளவுக்கு விலை குறையும். ஆனால் கூடவே மத்திய அரசுக்கு வருவாய் இழப்பும் ஏற்படும். எனவே செய்ய மாட்டார்கள்!

● த. பரதன், திருவாரூர்

***? அடுத்த உலகக் கால்பந்து போட்டியிலாவது இந்தியா விளையாடும் தகுதி பெறுமா?***

! உலகக் கோப்பை விளையாட்டுக்களை டி.வி.யில் பார்க்கும்போது, தகுதி பெறாவிட்டால்கூட தேவலாம் என்றுதான் தோன்றுகிறது! கால்பந்தானது எதிரியிடம் சிக்காமல் தவிர்ப்பது; சக ஆட்டக்காரரிடம் அதைத் தள்ளிவிடுவது; உதைப்பதில் திறமை காட்டுவது - இவையெல்லாம் கலைகள். காலை வாரி விடுவது, இடிப்பது என்று வன்முறை களத்தில் மட்டுமல்ல, ரசிகர்களிடமும் பெருகிவிட்டது. விளையாட்டு வினையாகி வருகிறது.

● பி. சிவசக்தி, பெரியசாமிபுரம்

***? இந்தமுறை விடுதலைப்புலிகள் பதுங்குவது போல் தெரிகிறதே...?***

! பதுங்குவதாவது... 'ராஜீவ் படுகொலையைப் பெருந்தன்மையுடன் பொறுத்தருளுமாறு' முதலைக் கண்ணீரே விட ஆரம்பித்துவிட்டனர். சோனியாவும் பிரதமரும் ஏமாந்துபோகாமல் இருக்க வேண்டும்.

● ஆர். ராமசுப்ரமணியன், வடவள்ளி

***? அண்மைக்காலமாக நியாயமான விமர்சனங்களைக்கூட தாங்க முடியாமல் தரமற்ற கண்டனங்களைப் பத்திரிகைகளின் மேல் தொடுப்பதன் மூலம், நடுநிலை இதழ்களைக்கூட கலைஞர் அனாவசியமாய்ப் பகைத்துக் கொள்கிறார் என்று தோன்றுகிறதே...?***

! பகை வளர்த்துக்கொண்டால் அது நடுநிலை இதழாகாது. 'நகுதற் பொருட்டன்று நட்டல்; மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற் பொருட்டு' என்பது குறள். குறளோவியம் எழுதிய கலைஞருக்குத் தெரியும்; நடுநிலை இதழ்களுக்குத் தெரியும். இடையில் இருப்பவருக்குத் தெரியாமல் இருக்கலாமே!



• பிறந்தநாள் வழிகாட்டல்!



•இடையில் இருப்பவருக்கு...

**விடுதலைப் புலிகள்**

● எல். வெங்கட்ராமன், கும்பகோணம்

***? பிரச்னம் பார்த்து, ஐயப்பன் கோபமாக உள்ளார் என்று பணிக்கர் கூறியுள்ளது பற்றி...?***

! ஐயப்பன் கோபப்படுவதற்கு நியாயமான காரணங்கள் உள்ளன என்று பணிக்கர் கூறுகிறார். அதில் உண்மை இருக்கத்தானே செய்கிறது. சபரிமலையின் தூய்மையும் பக்தர்களின் சிரத்தையும்

★ ரூ 50 பரிசு பெறுபவர்:

ஆ. கண்ணதாசன்,
ஆறுமுகம் இல்லம்,
198, ஜீவநந்தன் தெரு,
மெஜெஸ்டிக் காலனி,
வளசரவாக்கம், சென்னை - 600 087

❒ ரூ 100 பரிசு பெறுபவர்:

கே. சண்முகம்,
ஆதமங்கலம்புதூர்,
(முழு விலாசம் தேவை)

# பதுங்குவதுபோல் தெரிகிறதே..?

குறைந்துதான் இருக்கின்றன. ஐயப்பன் சமாதானமடைந்துவிட்டதாகவும் பின்னால் பணிக்கர் கூறினார். அதுவும் உண்மையே. இறைவன் அன்புமயமானவன். நாம் திருந்தினால் பிழை பொறுத்துக் கொள்வான்.

● ஆ. கண்ணதாசன், சென்னை - 87★

*? தீவிரவாதிகளுக்கு வெடிமருந்துப் பொருட்களை அனுப்புவது யார்?*

*!* சர்வதேச கள்ளச் சந்தை சங்கிலித் தொடராக, ரகசியமாக இயங்குகிறது. சில நாடுகளின் பொருளாதாரமே ஆயுதங்கள் உற்பத்தியில்தான் கொழிக்கிறது. போதைப் பொருள்களின் கள்ளத்தனமான உற்பத்தி, விநியோகம் போலத்தான் இதுவும்.

● எம். ஆன்டனி தமிழரசன், மும்பை - 17

*? ராகுல் காந்தி அடிக்கடி தமிழகத்துக்கு வந்தால் காங்கிரஸின் செல்வாக்கு அதிகரிக்கும் என்கிறாரே வாசன்?*

*!* ராகுல் அடிக்கடி வருவதால் மட்டுமே செல்வாக்கு அதிகரிக்காது. மக்கள் வேடிக்கை பார்த்துவிட்டுப் போய்விடுவார்கள். ஆட்சியில் பங்கு வேண்டும் என்று தலைமையிடம் வாதாடி, இடம் பிடித்து, மக்கள் நலத்துக்காக ஏதேனும் செய்து காட்டினால், மக்கள் அதை மறக்காமல் தேர்தலில் வோட்டுப் போட்டு ஆதரிப்பார்கள்.

● து. தியாகராஜன், திண்டுக்கல்

*? எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் முடிவில்லாத பிரச்னை உள்ள துறையாக உள்ளாட்சித் துறை இருக்கிறது என்று மு.க.ஸ்டாலின் கூறியுள்ளது பற்றி...?*

*!* கட்சி அரசியல் இன்றி உள்ளாட்சித் தேர்தல் நடத்தப்பட்டு, முறையாக ஜனநாயக அமைப்பு செயல்பட்டால் பிரச்னைகள் குறையும். உள்ளாட்சிகளிலும் கட்சி அரசியலே கொடிகட்டிப் பறப்பதால் பிரச்னைகள் மலிகின்றன.

● கே. சண்முகம், ஆதமங்கலம்புதூர்❒

*? எத்தனையோ கோடி பேர் தாங்கள் பிறந்த வருடம் கூடத் தெரியாமல் இருக்கும் இந்த நாட்டில், வருடம் தவறாமல் பிறந்தநாள் விழா கொண்டாடும் தலைவர்கள் பற்றி...?*

*!* அதிலும் தலைவி/தலைவரின் வயதளவுக்கு எடையுள்ள கேக் செய்து வெட்டும் அபத்தம் பெருகி வருகிறது. இந்தத் தொல்லையை நிராகரித்து 'பார்ட்டி'யில் பங்கேற்க மறுத்து, பிற தலைவர்களுக்கு வழிகாட்டியுள்ளார் ராகுல்காந்தி. ○


• தனியார் துணை!


• உள்ளாட்சிப் பிரச்னை


• செல்வாக்கு சூத்திரம்!

கல்கி

2006 ஜூலை 9
விய ஆனி 25
மலர் : 64
இதழ் : 49

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## சமுத்திரத்தில் கரைத்த பெருங்காயம்!

நெய்வேலி பழுப்பு நிலக்கரிக் கழகத்தின் (என்.எல்.ஸி.) பத்து சதவிகிதப் பங்குகளைத் தனியாருக்கு விற்க மத்திய அரசின் அமைச்சரவை முடிவெடுத்துவிட்டது. இதற்கு எதிர்ப்புக் குரல்கள் எழுந்துள்ளன. கூட்டணியில் இருந்தபோதும் தி.மு.க. தலைவர் கருணாநிதி இந்த முடிவை எதிர்த்துக் குரல் கொடுத்துள்ளார். இது குறித்து மறுபரிசீலனை செய்ய பிரதமரை வற்புறுத்திக் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

மத்திய அரசு இந்த முடிவை மாற்றிக் கொள்ளாவிட்டால், அதில் அங்கம் வகிக்கும் தி.மு.க.வும் எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்து கொள்ளுமாம்!

இந்நிலையில், ஜெயலலிதா எழுப்பியுள்ள கேள்வி நியாயமானதாகவே இருக்கிறது :

"அமைச்சரவை கூட்டம் கூட்டித்தானே நெய்வேலி பங்குகள் குறித்து முடிவெடுக்கப்பட்டது... அக்கூட்டத்தின்போது, தி.மு.க.வைச் சேர்ந்த மத்திய அமைச்சர்கள் என்ன செய்து கொண்டிருந்தார்களாம்?" என்று கேட்கிறார் ஜெ.

"அக்கூட்டத்தில் அவர்கள் பங்கேற்றார்களா என்று தெரியவில்லை" என்று முதல்வர் சொல்லியிருக்கும் பதிலானது கேலிக்கிடமாகிவிட்டது.

முக்கியமான கொள்கை முடிவு, அதிலும் குறைந்தபட்ச செயல்திட்டத்தை மீறுகிற முடிவு எடுக்கப்படுகிறபோது, ஏன் தி.மு.க.வினர் அக்கூட்டத்தில் கலந்து கொள்ளத் தவறினார்கள்? கலந்துகொள்ளத் தவறவில்லை எனில், ஏன் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை? அமைச்சரவை முடிவு என்பதாக எப்படிச் செய்தி வெளியானது?




'நவரத்னா' பொதுத்துறை நிறுவனங்கள், லாபத்தில் இயங்கும் பொதுத்துறை நிறுவனங்கள் நீங்கலாக பிற பொதுத்துறை நிறுவனங்கள் தனியார்மயமாக்கப்படுவதை கம்யூனிஸ்டுகள் எதிர்க்கவில்லை. நெய்வேலி பழுப்பு நிலக்கரிக் கழகம் வெற்றிகரமாகச் செயல்பட்டுவரும் பொதுத்துறை நிறுவனம்.

நஷ்டத்தில் இயங்கும் பொதுத்துறை நிறுவனங்களைத் தனியார்மயமாக்குவதில் அரசுக்கு அதிக ஆதாயம் கிடையாது. ஏனெனில், அவற்றின் பங்குகளுக்கு நல்ல விலை கிடைக்காது. அதனால்தான் அரசு லாபத்தில் நடக்கும் பொதுத்துறை நிறுவனங்களின் பங்குகளை விற்பதில் தீவிரம் காட்டுகிறது. லாபகரமாக இயங்கும் நெய்வேலி நிறுவனப் பங்குகளுக்கு நல்ல விலை கிடைக்கும் என்பதுடன், பத்து சதவிகிதப் பங்குகள் மட்டுமே விற்கப்படுவதால் இந்நிறுவனம் அரசின் கட்டுப்பாட்டிலேயேதான் தொடர்ந்து நீடிக்கும் என்பதும் மத்திய அரசின் வாதம்.

எனினும், கூட்டணியில் உள்ள இடதுசாரிகள் இந்த முடிவை எதிர்ப்பதற்குக் காரணம், இந்தப் பத்து சதவிகித விற்பனையானது என்.எல்.ஸி. மேல் அரசு கொண்டுள்ள பிடியைச் சற்று தளர்த்தும் என்பதுடன் படிப்படியாக, முழுமையாக என்.எல்.ஸி. தனியார்மயமாவதற்கு அடிகோலிவிடும் என்பதுதான்.

புதிய பொருளாதாரக் கொள்கையின் ஒரு முக்கிய அங்கம் தனியார்மயமாக்குதல். நஷ்டத்தில் இயங்கி, அரசுக்கு ஏராளமாகப் பொருளாதாரச் சுமை ஏற்றி வரும் பல பொதுத்துறை நிறுவனங்களை லாபகரமாக இயங்கச் செய்ய இது சிறந்ததொரு வழிதான்.

ஆனால், பொதுத் துறை நிறுவனங்கள் மக்களின் சொத்து அவற்றை விற்றுப் பணம் காணும் அரசு, அந்தப் பணத்தை மக்களின் ஆதாயத்துக்காகத் திரும்பவும் லாபகரமாக முதலீடு செய்ய வேண்டும். மற்றொரு சிறந்த முதலீட்டின் மூலம் உற்பத்திக்கு உதவி, கூடுதல் வருவாய் பெறும்படி செய்து, நாட்டின் வளம் பெருக்க வேண்டும். அவ்வாறு செய்வதற்குப் பதில், அத்தொகையை எடுத்துக் கொண்டுவிட்டால், அது சமுத்திரத்தில் கரைத்த பெருங்காய மாகிவிடும். மக்களுக்கு மிகப் பெரிய இழப்பு; அநீதி இழைக்கப்பட்டுவிடும். லாபகரமாக நடக்கும் நிறுவனங்களின் பங்குகள் இவ்வாறு விற்கப்பட்டு வீணடிக்கப்படும்போது ஏற்படும் இழப்பு அபரிமிதமானது.

கம்யூனிஸ்டுகள், தி.மு.க. மட்டுமின்றி, எதிர்கட்சிகளும் இந்தப் பிரச்னையை அரசியல் நோக்கில் மட்டும் பாராமல், மக்கள் நல நோக்கில், மத்திய அரசு எவ்வாறு செயல்பட வேண்டும் என்பதையும் சுட்டிக் காட்டட்டும்; அநீதி இழைக்கப்படாமல் காக்கட்டும். ●

# கலைஞர் வைத்த கொட்டு!

**வ**ழக்கமா யாரு சி.எம். ஆனாலும் நடிகர் சங்கம் தடபுடலா பாராட்டு விழா நடத்தும். ஆனா இப்போ அங்க அரசியல் புயலு வீசிக்





கிட்டு இருக்கறதால நம்ம சின்னத்திரைக் கலைஞர்கள் கேப்ல முந்தி, பாராட்டு விழாவை கலைவாணர் அரங்கத்துல நடத்துனாங்கப்பு.

அம்மாவோட அன்புக்குரிய குஷ்புவுல துவங்கி, சர்ச்சை புகழ் புவனேஸ்வரி வரைக்கும் எல்லா சின்னத்திரைக் கலைஞர்களும் ஆஜராகியிருந்தாங்க - ஃபுல் மேக்கப்ல. கலை நிகழ்ச்சிங்கற பேர்ல நடிகர் - நடிகைங்க அடிச்ச கூத்து இருக்கே... ரொம்ப ஓவரப்பு... எல்லாமே டப்பாங்குத்து - கும்மாங்குத்து பாட்டுங்க. சின்னத்திரைல முழுக்க போர்த்திக்கிட்டு வந்த அத்தனை நடிகைங்களும் இங்க அப்படியே உல்டா. எங்களுக்கு சினிமா பாட்டுக்கும் ஆடத் தெரியும்னு நிரூபிக்கறதுக்காகவே விழா எடுத்த மாதிரி செம கிளாமரான டிரஸ்ஸைப் போட்டுகிட்டு குத்தாட்டம் போட, அதைப் பார்க்க கலைஞரோட ஏழெட்டு மந்திரிங்க வேற!

இதுல என்ன வருத்தம்னா, ஸ்டேஜ்ல வர்றது யாருன்னு கலைஞருக்கு முகம் முழுக்கச் சிரிப்போட துரைமுருகன் வெளக்கம் வேற கொடுத்துக்கிட்டு இருந்தாரு.

பாலசந்தரு பேசுனப்போ, "பெரிய திரைக் கலைஞர்கள் இப்போது திக்குத் தெரியாத காட்டில் இருந்துகொண்டு தவிக்கிறார்கள். அவர்களை மன்னியுங்கள்"ன்னு சினிமா நடிகர்கள் எலக்ஷன் டைம்ல அம்மா பக்கம் போன மேட்டரை டச் பண்ணினாரு. ஆனா அதுக்கு கலைஞரு ரொம்பவே டென்ஷனாயிட்டாரு போல. "தப்பு செஞ்சவங்கதான் மன்னிப்பு கேட்கணுமே தவிர, மன்னிப்புக்குப் பரிந்துரை பண்றது தேவையில்ல"ன்னு ஷாட் கொடுத்துட்டு கடைசில "மறப்போம் மன்னிப்போம்"னு சொல்லிப் பிரச்னையை ஸ்மூத்தாக்கினாரு.

கூடவே "இன்னிக்குக்கூட பேப்பர்ல, இன்னொரு சங்கம் ஒண்ணு உருவாகப் போறதா பார்த்தேன். இந்த சங்கத்துல இருக்கறவங்க ரொம்ப ஒத்துமையா இருக்கணும்"னு சொல்லி ராதிகா தலைமையில சின்னத்திரைத் தயாரிப்பாளர்கள் சங்கம் உருவாகப் போறதுக்கு மறைமுகமா கொட்டு வச்சாரு.

எல்லோருக்கும் டீ.வி. கொடுக்கறேன்னு சொல்ற கலைஞருக்கே ஒரு சாம்ஸங் டீ.வி.யை நினைவுப் பரிசா கொடுத்தது ரசிக்கற மாதிரி இருந்துச்சு. எப்படியோ, பாராட்டு விழாங்கற பேர்ல தங்களோட கோரிக்கைகளை நிறைவேத்திக்கிட்டா சரிதான்!

**- ஒற்றன்**

படங்கள் : **புதூர் சரவணன்**

# வீட்டுக்குள்ளே விபரீதம்!




சேகர் - இந்திரா தம்பதி சாப்ட்வேர் துறையில் பணிபுரிபவர்கள். அண்மையில் அவர்கள் ஆயிரம்விளக்கு அனைத்து மகளிர் காவல் நிலையத்துக்கு வந்து புகாரொன்றைக் கொடுத்தனர்.

‘‘ஒரு ஞாயிற்றுக்கிழமை காலை அவசர வேலையாக இரண்டுபேரும் குழந்தையுடன் வெளியில் சென்றிருந்தோம். திடீரென்று வீட்டிலிருந்து போன் வந்தது. குழந்தையைப் பார்த்துக் கொள்வதற்காக ஏற்பாடு செய்திருந்த பெண்மணி ‘என் அக்கா இறந்துவிட்டார் என்று போன் வந்தது. நான் உடனே ஊருக்குப் புறப்பட வேண்டும்’ என்று கூறினார். நாங்கள் அவசர அவசரமாக வீடு திரும்பினோம்.

துணிமணிகளைத் தன் பையில் எடுத்து வைத்துக் கொண்டு புறப்படுவதற்குத் தயாராக இருந்தார் அந்தப் பெண்மணி. ‘எப்போது உங்கள் அக்கா இறந்துபோனார்? எப்படி தகவல் வந்தது? எந்த ஊருக்கு, எப்படிப் போவீர்கள்? கையில் டிக்கெட்டுக்குப் பணம் இருக்கிறதா?’ என்றெல்லாம் சாதாரணமாக விசாரிக்க, அவர் சொன்ன பதில்கள் எங்களுக்குத் திருப்திகரமாக இல்லை. டெலிபோனின் ‘காலர் ஐ.டி.’யில் செக் பண்ணிய போது, அவர் சொன்னது மாதிரி டெலிபோன் ஏதும் வந்ததற்கான அறிகுறி இல்லை. எங்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டது.

சட்டென்று தன் பையுடன் அறைக்குள் சென்று, தன் பையில் வைத்திருந்த கற்கள் பதித்த வளையல்கள் இரண்டை எடுத்து, டிரஸ்ஸிங் டேபிள் டிராயருக்குள் வைக்கிற போது மாட்டிக்கொண்டார். விசாரித்த போது, ‘புத்தி பேதலிச்சுப் போச்சு! திருடிட்டேன்! மன்னிச்சு, விட்டுடுங்க!’ என்று அழ ஆரம்பித்தார்.

விஷயத்தை அப்படியே விட்டுவிட்டால், நாளை இதே பெண்மணி, வேறு எங்காவது வேலைக்குப் போய், அங்கேயும் தன் கைவரிசையைக் காட்டக்கூடும் என்றுதான் புகார் கொடுக்க வந்தோம்'' என்றிருக்கின்றனர்.

‘‘சமீபகாலமாக, இதுபோல நிறைய புகார்கள் வருகின்றன. வீட்டில் இருக்கும் உடல்நலம் குன்றிய முதியோர்களையும், கைக்

**வேலைக்குப் போகும் பெண்களுக்கு ஓர் எச்சரிக்கை!**

குழந்தைகளையும் விட்டோடு இருந்து• பார்த்துக்கொள்ள பெண்மணிகளை வைத்துக் கொள்ளும் பலரும் இது போன்ற பிரச்னைகளைச் சந்திக்கிறார்கள். இதுபோல பெண்மணிகளை ஏற்பாடு செய்யும் ஏஜென்சி நிறுவனங்கள் இன்று காளான்கள் போல அதிகரித்து விட்டன. இங்கே வந்து பதிவு செய்துகொள்ளும் பெண்மணிகளைப் பற்றி ஏஜென்சியினர் சரியாக விசாரிப்பது இல்லை. இது சம்பந்தமாகக் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகளையும் கடைப்பிடிப்பது கிடையாது. பணம் சம்பாதிப்பது ஒன்றுதான் இத்தகைய நிறுவனங்களின் லட்சியம். வேலை கேட்டு வரும் பெண்மணி மீது ஏதாவது கேஸ் இருக்கிறதா?, அவர் போலீசாரால் தேடப்பட்டு வரும் குற்றவாளியா? என்றெல்லாம் காவல்நிலையத்தில் விசாரிக்க வேண்டும்.



> ''ஊரை விட்டு ஓடுறப்ப எதிர் வீட்டுப் பொண்ணுகிட்ட மட்டும் சொல்லணும்ங்கறீங்களே... ஏன்?''
> ''என் காதலை நிராகரிச்சவ அவ!''
> **- அம்பைதேவா**

முறைப்படி எல்லா தகவல்களையும் கேட்டுப் பெற வேண்டும். உறவினர்கள் யார் என அறிந்து, அவர்களிடம் விசாரணை செய்ய வேண்டும். நாளைக்கு ஏதாவது பிரச்னை என்றால் உறவினர்கள் பொறுப்பேற்பார்களா என்று கேட்க வேண்டும். வரும் நபர்களின் புகைப்படம் மற்றும் கைவிரல் ரேகைகளையும், இதர அங்க அடையாளங்களையும் தாங்கள் பதிவு செய்துகொண்டு, காவல் நிலையத்திலும் அளிக்க வேண்டும். பிரச்னை வரும் சமயங்களில் விஷயத்தை அப்படியே விட்டு விடாமல், காவல்துறையில் புகார் செய்ய வேண்டும்'' என்று எச்சரிக்கிறார் மகளிர் காவல் நிலைய இன்ஸ்பெக்டரான ராஜலட்சுமி.

வேலைக்கு ஆட்களை அனுப்பும் ஏஜென்சிகள் தரப்பில் இந்தப் பிரச்னைக்கு என்ன பதில் சொல்கிறார்கள்?

திருவான்மியூரிலிருக்கும் நிறுவனமொன்றில் பணிபுரியும் பெண் ஒருவர், ''எங்களைப் போன்ற நிறுவனங்கள், இந்த விஷயத்தில் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகளைக் கடைப்பிடிப்பதில்லை என்பது உண்மைதான். காரணம் இதுபோன்ற அமைப்புகளை நடத்துகிறவர்கள் அரசியல்வாதிகளுக்கும், காவல்துறையினருக்கும் நெருக்கமானவர்கள். எனவே தங்களுக்குப் பிரச்னை வராமல் பார்த்துக் கொள்வார்கள். விஷயம் கை மீறிவிட்டால், நிறுவன ஊழியர்களைப் பலிகடா ஆக்கிவிடுவார்கள். நான்கைந்து பேரை மட்டுமே வேலைக்கு வைத்துக்கொண்டு, இது போன்ற நிறுவனங்கள் நடத்தப்படுகின்றன. எனவே, இங்கே வேலை கேட்டு வருகிறவர்களின் பூர்வாங்கத் தகவல்களைத் தன்னிச்சையாகப் புலனாய்வு செய்து, சரி பார்ப்பது கிடையாது.

புகார் என்று வருகிறபோது, அவர்கள் செலுத்திய கட்டணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டு, அவர்களின் வசைமொழிகளை அமைதியாகக் கேட்டுக்கொண்டு, மன்னிப்புக் கேட்டாலே பலரும் சமாதானமாகி விடுவார்கள். பெரும் நஷ்டம் ஏற்பட்ட கேஸ்கள் போலீஸ் கைக்குப் போய்விடும்'' என்றார்.

**- கௌதம்ராம்**



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.

கிளை நிறுவனம் : புதிய எண். 16, பழைய எண். 19, முதல் மாடி, 30வது தெரு,
தில்லைகங்கா நகர், நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்

ராதிகாவின் 'செல்வி' சீரியலில் இருந்து அதன் இயக்குநர் சுந்தர் கே.விஜயன் மாற்றப்பட்டு, அவர் இடத்துக்கு சமுத்திரக்கனி வந்திருக்கிறார். சில வருடங்களுக்கு முன்பு இதே ராதிகாவின் 'அண்ணாமலை' சீரியலின் இயக்குநர் சி.ஜே. பாஸ்கருக்குப் பதிலாக வந்தவர்தான் இந்த சுந்தர் கே.விஜயன். 'இன்று அவருக்கே இந்த நிலையா?' என்பதுதான் இப்போது சின்னத்திரை வட்டாரத்தில் ஹாட் டாபிக். என்ன... ஏது என்று சுந்தர் கே.விஜயனிடமே கேட்டோம். மனிதர் கொட்டித் தீர்த்துவிட்டார்.

''எனக்கும் ராதிகாவுக்கும் பிரச்னை வந்துட்டதாலதான் இந்த அதிரடி மாற்றம்னு சொல்றாங்க. அவங்க மேல எனக்கு மிகப்பெரிய அபிமானம் இருக்கு. அவங்களோட உழைப்பு, முன்னேற்றத்தைப் பார்த்து நான் இன்னமும் பிரமிச்சுட்டு இருக்கேன். அதனால அவங்ககூட பிரச்னை பண்ற அளவுக்கு நான் பெரிய ஆள் கிடையாது. இவ்ளோ நாள் நான் 'செல்வி'யை இயக்கினேன். இப்போ சமுத்திரக்கனி இயக்கப் போறார், அவ்ளோதான். இந்த சமுத்திரக்கனி ஒண்ணும் எனக்குத் தெரியாதவர் இல்ல. என்கூட ஒன்பது வருஷம் 'ஊஞ்சல்', 'ஜன்னல்', 'மடிசார் மாமி', 'என் பெயர் ரங்கநாயகி'ன்னு ஏகப்பட்ட சீரியல்கள்ல வொர்க் பண்ணினவர்தான். அதனால் இதை ஒரு மாற்றம்னே சொல்ல முடியாது. இது முழுக்க முழுக்க எங்களுக்குள்ள நடந்த சின்ன அட்ஜெஸ்ட்மெண்ட், அவ்வளவுதான். இன்னொரு வகையில பார்த்தா, இளைஞர்களுக்கு வழிவிட்டிருக்கேன்னுகூட சொல்லலாம்.

# 'எனக்கும் ராதிகாவுக்கும் என்ன பிரச்னை?'



• சுந்தர் கே.விஜயன்

சன் டீவில எட்டரை மணி ஸ்லாட்டுல ஒரு புது சீரியல் கமிட் ஆயிருக்கு. பேரு 'லக்ஷ்மி'. நடிகை மீனாதான் இதுல லீட் கேரக்டர். குங்குமம் சீரியலோட புரொடியூசர் சுஜாதா விஜயகுமார்தான் இதையும் தயாரிக்கறாங்க. ஒரே சமயத்துல ரெண்டு சீரியலை செய்யக்கூடாதுங்கறது சன் டீவில விதி. அதற்கான அட்ஜெஸ்ட்மெண்ட்தான் இது.

'செல்வி' சீரியலோட கதை என்னோடது இல்ல; வேற ஒருத்தரோடது. அத



னால கதைல பெருசா மாற்றம் வந்துட வாய்ப்பு கம்மி. இதே மாதிரிதான் நானும் அண்ணாமலையைப் பாதியில இருந்து டைரக்ட் பண்ண ஆரம்பிச்சேன். அப்போ எனக்குக் கொஞ்சம் கஷ்டமா இருந்துச்சு. ஏன்னா, எனக்கும் சி.ஜே.பாஸ்கருக்கும் தனித்தனி ஸ்டைல். ஆனா, இப்போ சமுத்திரக்கனிக்கும் எனக்கும் அப்படியில்லை... ஸ்டைல் கிட்டத்தட்ட ஒண்ணுதான். அதனால எந்தக் குழப்பமும் வராது. நானும் ரெகுலரா செல்வியை வாட்ச் பண்ணிட்டு இருக்கேன் - ஒரு ரசிகனா... நல்லாவே போயிட்டிருக்கு.

நான் புதுசா பண்ணப் போற 'லக்ஷ்மி'யைப் பத்தியும் சொல்லணும். இவ நிச்சயமா 'அவள் ஒரு தொடர்கதை'யா இருக்கமாட்டா. சீரியல் முடியற வரைக்கும் ஜெயிக்கறதுக்காகப் போராடிக்கிட்டே இருக்கற சராசரி சீரியல் புரட்சிப் பெண் இல்லை இந்த லக்ஷ்மி. ஒரு குடும்பத்துல பாசத்துக்கும், ப்ரொஃபெஷனுக்கும் இடையிலான போராட்டம்தான் இந்த லக்ஷ்மியோட கதை.''

- ஆர்.முத்துக்குமார்

படம் : ராஜன், ஸ்ரீஹரி



# ஆற்றாமையின் நீர்த்தாரை..

லதா பிரபாகர்

களைப்பாயிருக்கிறது
நிறைய யோசித்தாகிவிட்டது
அதிகம் பேசியாகிவிட்டது
கேள்விகளற்ற பதிலும்
பதில் தேடும் கேள்விகளுமாய்
மனம் ஆடிக் கொண்டிருக்கிறது
எழுத்தில் எத்தனை வடித்தாலும்
வடிவதாயில்லை
ஆற்றாமையின் நீர்த்தாரை
தாமதமாய்ப் புரிந்த உண்மைகளால்
தயக்கமாய் அழும் மனது
நிஜத்தின் கருவறை நமக்கு
எதைத் தரப்போகிறது
காலத்தின் கணக்குகளுக்கு
எப்படியோ விடை வந்துவிடுகிறது
தவறான வாய்ப்பாடுகளோடு

# உங்கள் ஜூனியர்

**கொ**ண்டை போட்ட ஆயா மாப் வைத்துத் தரையைத் துடைத்துக் கொண்டே நகர, இரண்டு கால்களையும் தூக்கிக் கொண்டான் சிவராமன். சுவர்களில் தொங்கிய சிரிக்கும், தவழும், வாயில் விரல் வைத்திருக்கும் அழகழகான குழந்தைகளின் படங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள் மகேஸ்வரி.

நாற்பது நாற்காலிகளில் ஒன்றிரண்டுதான் காலியாக இருந்தன. பலர் வெறித்த பார்வையுடன் அமர்ந்திருக்க, சிலர் சன்னக் குரல்களில் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"உங்க டோக்கன் நம்பர் என்ன?"

"பதினேழு. உள்ளே போயிருக்கிறது என்ன நம்பர்?"

"எட்டு. நீங்க போறதுக்கு இன்னும் ஒரு மணி நேரம் ஆயிடும்மா."

"இந்த ஆஸ்பத்திரில கேண்டீன் இருக்கா? ஒரு காபி குடிச்சுட்டு வந்துடட்டுமா?"

சிவராமன் பாக்கெட்டில் செருகியிருந்த கண்ணாடியை எடுத்துப் போட்டுக் கொண்டு, "பையைக் கொண்டா மகேஸ்வரி, எல்லா ரிப்போர்ட்சும் இருக்கான்னு பாத்துடறேன்" என்று வாங்கி எக்ஸ்-ரே, ஸ்கேன் ஃபிலிம் மற்ற ரத்தச் சோதனை ரிப்போர்ட்ஸ் எல்லாம் எடுத்து ஒவ்வொன்றாகப் பார்த்தான்.

தண்ணீர் பாட்டிலை எடுத்துக் குடித்துவிட்டு வைத்து, "ஏங்க..." என்றாள் மகேஸ்வரி.

"என்ன?"

"இவங்க மட்டும் புதுசா என்ன சொல்லிடப் போறாங்க?"

"தமிழ்நாட்லயே இவங்கதான் இதுல பெஸ்ட் டாக்டர்! மூணு மாசமா போராடி அப்பாயிண்ட்மெண்ட் வாங்கிருக்கோம். ஏன் இப்படி நம்பிக்கை இல்லாம பேசறே?"

"அதுக்கில்லைங்க. இவங்க மறுபடி புதுசா எல்லா டெஸ்ட்டும் எடுக்கணும்னு சொல்லிட்டா மறுபடியும் அலையணுங்க. செலவும் எக்கச்சக்கமா ஆயிடும்."

"நீயா எதுக்குக் கற்பனை பண்ணிக்கிட்டுக் கவலைப்படறே? முதல்ல அவங்க என்ன சொல்றாங்கன்னு கேப்போம்."

சிவராமன் எழுந்து ஜன்னல் கண்ணாடி வழியாக நான்கு மாடிகளுக்குக் கீழே சாலையின் வேக இயக்கத்தைப் பார்த்தான். சாலையோர பஸ் ஸ்டாப்பில் வந்து நின்ற ஒரு பஸ்ஸிலிருந்து சீருடையுடன் இறங்கிய ஏழெட்டு பள்ளிக் குழந்தைகளைப் பார்க்க... பெருமூச்சு வந்தது. கைகளைக் கட்டிக் கொண்டு முகத்தில் கலவரத்துடன் அமர்ந்திருந்த தன் மனைவியைப் பார்த்தான். நாங்கள் மட்டும் என்ன பாவம் செய்தோம்?

"மகேஸ்வரி சிவராமன்!" என்று கதவு திறந்து வெளியே வந்த நர்ஸ் அழைத்ததும், சிவராமன் கர்ச்சீப்பைப் பேண்ட் பாக்கெட்டில் வைத்துக்கொண்டு தன் மனைவியோடு அறைக்குள் நுழைந்தான்.

டாக்டர் சியாமளாதேவி பத்து வருஷப் பழக்கம் போல கலபமாகப் புன்னகைத்தார். லிப்ஸ்டிக் போட்டிருந்தார். காதோரம் நரைத்திருந்தது. மூத்துக் கம்மல் பாந்தமாயிருந்தது. காட்டன் புடவை மதிப்பைக் கூட்டியது. உட்காரச் சொல்லிவிட்டுக் கைகளைக் கட்டிக்கொண்டு ஆழமாகப் பார்த்தார்.

"ஏற்கெனவே பல டாக்டர்சைப் பாத்திட்டோம். கடைசி முயற்சியா உங்ககிட்ட வந்திருக்கோம்" என்ற சிவராமன், ரிப்போர்ட்ஸ் எல்லாம் எடுத்து அவர் பக்கம் வைத்தான்.

"எந்த ஊரும்மா உனக்கு?" என்று கேட்டபடி ரிப்போர்ட்சைப் புரட்டினார் சியாமளாதேவி.

"கும்பகோணம்" என்றாள் மகேஸ்வரி.

"உங்களுக்கு சார்?"

"தஞ்சாவூருங்க டாக்டர்."

# பட்டுக்கோட்டை பிரபாகர்

"இப்ப எங்க இருக்கீங்க?"

"திண்டிவனத்தில இருக்கேன். பேங்க் ஆபீசர்."

"எப்போ கல்யாணமாச்சி?" என்று கேட்டபடி எக்ஸ்ரே எடுத்துக் கருவியில் பொருத்தி லைட் போட்டுப் பார்த்தார்.

"ஒம்போது வருஷம் ஆச்சி."

"லவ் மேரேஜா?"

"இல்லை டாக்டர். ஜாதகப் பொருத்தம் எல்லாம் பார்த்து நடந்த அரேன்ஞ்ட் மேரேஜ்தான்."

"ஆரம்பத்துல குழந்தை வேணாம்னு தள்ளிப் போட்டீங்களா?"

"ஆமாம் டாக்டர். ரெண்டு வருஷத்துக்குக் கட்டுப்பாடா இருந்தோம்."

"கூச்சப்படாம சொல்லலாம். எந்த முறைகள்ல கட்டுப்பாடா இருந்தீங்க?"

"காண்டம் பயன்படுத்தினோம், டாக்டர்."

"எப்பயாவது கருத்தடை மாத்திரை எதுவும் சாப்பிட்டியாம்மா?"

"இல்லைங்க."

"உண்டாகி, வேணாம்னு கலைச்சிருக்கீங்களா?"

"இல்லைங்க."

"மிஸ்டர் சி[illegible]ன், நீங்க ஹெல்த் செக்கப் பண்ணிக்கிட்டீங்களா?"

"பண்ணிக்கிட்டேன் டாக்டர். அந்த ரிப்போர்ட்ஸ் தனியா இருக்கு" என்று எடுத்துக் கொடுத்தான்.

பத்து நிமிடங்கள் எல்லாவற்றையும் பொறுமையாகப் பார்த்துவிட்டு நிமிர்ந்தார் சியாமளாதேவி.

"உங்க ரெண்டு பேருக்கும் மருத்துவ ரீதியா குழந்தை பெத்துக்கறதுக்கான முழுத் தகுதியும் இருக்கு. யார்கிட்டயும் குறையில்லை."

"இதைத்தான் எல்லாருமே சொன்னாங்க. அலோபதி தவிர சித்தா, ஹோமியோபதி, நேச்சுரோபதி, அக்குபஞ்சர்... இப்படி ஒண்ணு விடலை டாக்டர். போகாத கோயில் இல்லை. நாடி ஜோசியம், கம்ப்யூட்டர் ஜோசியம்னு மரத்தடி கிளி ஜோசியம் வரைக்கும் பார்த்துட்டோம். எல்லாரும் பேசிவெச்ச மாதிரி உங்களுக்குப் புத்திர பாக்யம் நிச்சயமா இருக்குன்னுதான் சொல்றாங்க. ஆனா ஒம்போது வருஷமாச்சி. கடவுள் கண்ணைத் தொறக்கலை" என்றபோது மகேஸ்



வரிக்குத் தொண்டை அடைத்துக் கண்கள் கலங்கின.

"உங்க மனநிலை புரியுது. வளர்க்க சக்தி இல்லாத குடும்பத்தில நாலஞ்சி வரிசையா பொறக்குது. ஏங்கித் தவிக்கிறவங்களுக்கு ஏமாற்றம்தான் கிடைக்குது."

"என் சக்திக்கு நாலு குழந்தைகளைக் கூட நல்லபடியா வளர்த்து ஆளாக்க முடியும் டாக்டர். ஒண்ணுக்கே வழியைக் காணமே. ஏன் டாக்டர்? ஏன் இப்படி?" என்றான் சிவராமன் விரக்தியாக.

"மனிதர்களோட எல்லா கேள்விகளுக்கும் பதில்கள் இல்லை சார்."

"மனசே வெறுத்துடுச்சி டாக்டர். சின்னக் குழந்தைகளைப் பாத்தாலே மனசு பொங்குது. யாரும் நேரடியா சொல்றதில்லை. ஆனா முதுகுக்குப் பின்னாடி பேசறாங்க. மருத்துவ ரீதியா எந்தப் பிரச்னையும் இல்லைன்னு சர்ட்டிஃபிகேட் வாங்கிக் கழுத்தில மாட்டிக்கிட்டு அலைய முடியுமா, சொல்லுங்க" என்றான் சிவராமன்.

"புரியுது."

"நல்ல விஷயங்களுக்குப் போய் முன்னாடி நிக்கறதுக்கே கூச்சமா இருக்கு. ஏதாச்சும் சொல்லிடறாங்க. எங்கயும் போறதில்லை. தாழ்வு மனப்பான்மையில தலையைக் குனிஞ்சிக்கிட்டுதான் கோயிலுக்குக்கூடப் போறேன். என்னைவிட நாலு வயசு சின்னவ என் தங்கச்சி. அவளுக்குக் கல்யாணமாகி மூணு வருஷத்துல ஒரு பையன், ஒரு பொண்ணு. குடும்பத்துல ஒப்பிட்டுப் பேசிக் காயப்படுத்தறாங்க. பக்கத்து வீட்டுப் பையன் தப்பு செஞ்சா கண்டிக்க முடியலை. பெத்திருந்தாதானே அருமை தெரியும்னு சுருக்குன்னு குத்திய சொருகற மாதிரி பேசிடறாங்க" என்றாள் மகேஸ்வரி.

"உண்மைதான்."

"டாக்டர், போன வருஷம் வரைக்கும் உங்க மூலமா வைத்தியம் செஞ்சிக்கிட்டு அப்படிப் பொறந்த குழந்தைங்க பத்தாயிரத்தி நானூறுன்னு வெளில போர்டுல கணக்கு எழுதி வெச்சிருக்கீங்களே, எங்களுக்கும் ஒரு நல்ல வழியைக் காட்ட முடியாதா?"

சியாமளாதேவி சிரித்துக் கொண்டார்.

"நோய் இருந்தா வைத்தியம் செய்யலாம். பிரச்னையே இல்லாதப்போ என்ன வைத்தியம் செய்ய முடியும்? வழி கேட்டீங்களே, அதைக் காட்ட என்னால முடியும். தப்பா நினைச்சுக்காதீங்க. ஒம்போது வருஷமா ஜோசியன் வீட்டுக்கும், ஆஸ்பத்திரிக்கும், கோயிலுக்கும் அலைஞ்சீங்களே, ஒரு தடவைகூட ஒரு அனாதை இல்லத்துக்குப் போய், அங்க இருக்கிற குழந்தைகளைப் பார்க்கலாம்னு உங்களுக்குத் தோணலையா?"

"நீங்க என்ன சொல்ல வர்றீங்கன்னு தெரியும் டாக்டர். அது சரியா வராது டாக்டர்" என்றான் சிவராமன்.

"எது?"

"இதென்ன மாத்திரை கமலா, நான் நல்லாத்தானே இருக்கேன்?"

"இது ஜீரண மாத்திரை. கோபத்துல நான் ஏதாவது திட்டினா ஜீரணிக்க முடியலைன்னு சொல்லக்கூடாது."

- நா.கோகிலன்

"ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக்கிட்டா என்னன்னுதானே கேக்கறீங்க. அதைத்தான் சரியா வராதுன்னு சொன்னேன்."

"ஏன்?"

"எப்படிங்க டாக்டர் சரியா வரும்? யாரோ பெத்த குழந்தைக்கு நம்ம ரத்தத்திலேர்ந்து வர்ற புத்தி வருமா? வம்ச வழின்னு எதுக்குச் சொல்றது?"

"உங்க சொந்த ரத்தமா இருந்தா உங்க புத்தி அப்படியே வரும்னு யார் சொன்னது? நீதிபதி புள்ளை குற்றவாளியா ஆகலையா? தலைவர் புள்ளை தறுதலை ஆகலையா? அதே மாதிரி ஆத்திச்சூடிகூட படிக்காதவங்க புள்ளை அமெரிக்காவல லட்சக்கணக்குல சம்பாதிக்கிறதில்லையா? என்ன பேசறீங்க? ஒரு குழந்தை பொறப்பால மட்டும் உருவாகலை! முக்கியமா வளர்ப்பாலதான் உருவாகுது! உங்க ரத்தத்திலேர்ந்து வர்ற குழந்தைக்கு உங்க ஜாடை வேணும்னா கிடைக்கலாம். உங்களை மாதிரியே தலையை சாய்ச்சிப் பேசலாம். உங்களை மாதிரியே நடக்கலாம். அதுகூட அமையும்னு உத்தர வாதம் இல்லை."

"இந்த வாதம் வேணாம் டாக்டர்.

மனசு ஏத்துக்க மாட்டேங்குது. யாரோ பெத்த குழந்தைக்குச் சட்டை தரலாம்; பிஸ்கெட் தரலாம். என் புள்ளைன்னு வீட்ல வெச்சி பாசம் காட்டி வளர்க்க முடியாது. அதுக்குப் பெரிய பெரிய ஞானிகளோட மனசு வேணும்."

"நாட்ல யாருமே தத்தெடுத்து வளர்க்கலையா? அவங்க எல்லாம் ஞானிகளா? அடிப்படையா அன்புதாங்க வேணும்."

"தவிர்க்க முடியாத சூழ்நிலைல தத்தெடுக்கறாங்க. இல்லைன்னு சொல்லலை. அவங்க உள் மனசுக்குத்தான் உண்மை தெரியும். சொந்தக் குழந்தை மேல வைக்கிற அளவுக்கு அதே பாசம் வைக்க முடியாது. இரக்கம் வேற! பாசம் வேற!"

"விசாலமா சிந்திக்காம தயவுசெஞ்சி கொச்சைப்படுத்திப் பேசாதீங்க. ஒண்ணு கேட்டா கோவிச்சுக்காம ரெண்டு பேரும் பதில் சொல்லணும். சொல்வீங்களா?" என்றார் டாக்டர்.

"கேளுங்க. கோபப்பட என்ன இருக்கு?"



"உங்க அம்மாவை நீங்க நேசிக்கிறீங்களா சிவராமன்?"

"என்ன கேள்வி இது? கண்டிப்பா!"

"உங்க மனைவியை நீங்க நேசிக்கிறீங்களா?"

"நிச்சயமா. அவளை நான் எவ்வளவு தூரம் நேசிக்கிறேன்னு என்னால வார்த்தைகளால விளக்க முடியாது."

"ஒத்துக்கறேன். ஒம்போது வருஷமா குழந்தை பெத்துக் கொடுக்கலையேன்னு சில கணவர்கள் வெறுத்து விவாகரத்து வரைக்கும்கூட போறதுண்டு. சரி மகேஸ்வரி, நீ உன் கணவனை நேசிக்கிறியாம்மா?"

"பூஜிக்கிறேன் டாக்டர். இவரே ஏழு ஜென்மத்துக்கும் எனக்குப் புருஷனா வரணும்னு சாமிகிட்ட வேண்டிக்குவேன்"

"அதெப்படி? உங்க மனைவியும் சரி, உங்க கணவனும் சரி... உங்க ரத்தமில்லை. உங்க உடம்புலேர்ந்து வந்தவங்க இல்லை! எங்கயோ, யாருக்கோ பொறந்த ரெண்டு பேரும் எப்படி இவ்வளவு தூரம் நேசிக்க முடியுது? இந்தப் பாசத்துக்கு ரத்த பந்தம் அவசியமா என்ன? குழந்தைன்னு வர்றப்ப மட்டும் உங்க உடம்புலேர்ந்து, உங்க ரத்தத்திலேர்ந்து வரணும்னு ஏன் எதிர்பார்க்கணும்? யாரோ பெத்த, ஏதோ ஒரு குழந்தையை இதே மாதிரி நேசிக்க ஏன் முடியாது?"

சிவராமன், மகேஸ்வரி இரண்டு பேரும் பதில் இல்லாமல் வாயடைத்துப் போய் டாக்டரையேப் பார்த்தார்கள்.

"ஒரு உண்மையைச் சொல்லட்டுமா? வெளில போர்டுல ஒரு கணக்கு இருக்கே.. அதுல பத்து சதவிகிதம் - அதாவது கிட்டத்தட்ட ஆயிரம் குழந்தைகள் எங்க ட்ரஸ்ட் நடத்துற அனாதை இல்லத்திலேர்ந்து குழந்தை பெற வாய்ப்பில்லாத தம்பதிகளுக்குத் தத்து கொடுக்கப்பட்டவங்க. அவங்களையும் சேர்த்துத்தான் அந்தக் கணக்கு" என்று டாக்டர் மேஜை டிராயரைத் திறந்து ஒரு பெட்டியிலிருந்து விலாச அட்டை எடுத்து நீட்டினார்.

"எங்க ட்ரஸ்ட் நடத்தற அனாதை இல்லத்தோட அட்ரஸ் இது. மெதுவா தீர்மானிங்க. முதல்ல சும்மாப் போய்ப் பாருங்க."

கண் கலங்கின சிவராமன் உடனே வாங்கிக் கொண்டு திரும்பி, "மகேஸ்வரி, ஒம்போது வருஷம் வேஸ்ட் பண்ணிட்டோம்னு நினைக்கிறேன்" என்றான்.

மகேஸ்வரி, "டாக்டர், ஒரு தீர்மானத்தோடவே அந்த இல்லத்துக்குப் போறோம். ரொம்ப தேங்க்ஸ் டாக்டர்" என்றாள்-கரகரத்த குரலில்.

அருகில் சுவரில் பெரிய புகைப்படத்தில் அந்த அனாதை இல்லத்தின் வாசலில் எடுக்கப்பட்ட குரூப் போட்டோவில் நிறைய குழந்தைகள் சிரிக்காமல் இருந்தார்கள். ●

“எனக்கு படிப்பு சுத்தமா ஏறலை. வேற வழியில்லாமத்தான் டான்ஸ் ஆட வந்தேன். ஆனா அதுல உண்மையா உழைச்சேன். புதுசா செய்யணும்னு எதுவுமே முயற்சி செய்யலை. இயல்பா பண்றதையே ‘ஆஹோ ஓஹோ’ன்னு பேசினாங்க. சன் டி.வி. ஆரம்பமானபோதுதான் நானும் ஸ்க்ரீன் முன்னாடி வந்தேன். ‘சிக்குபுக்கு ரயிலே’, ‘ஊர்வசி ஊர்வசி’ பாடல்களெல்லாம் அடிக்கடி சன் டி.வி.யிலே ஒளிபரப்பாகி நானும் பெருசா பேசப்பட்டேன்” என்று ஃப்ளாஷ்பேக்குக்குள் மூழ்கி எழுகிறார் பிரபுதேவா. பதினைந்து வருடங்களுக்கு முன்னால் தமிழ் சினிமாவைப் புரட்டிப்போட்டவர். தற்போது விஜய் - அசின் நடிக்கும் ‘போக்கிரி’ படத்தின் இயக்குநராக மீண்டும் கோடம்பாக்கத்துக்குள் நுழைந்திருக்கிறார்.

‘இதென்ன புது அவதாரம்?’ என்றால், தீர்க்கமாகப் பேசுகிறார். “நான் டெக்னீஷியனாத்தான் தமிழ் சினிமாவுக்குள்ளே நுழைஞ்சேன். ஆனா என்னை நடிக்க விட்டுட்டாங்க. டான்ஸுல கிரியேட்டிவா பண்ணிப் பழக்கப்பட்ட எனக்கு ஹீரோவா பண்ணும்போது நிறைய சிக்கல் ஏற்பட்டுச்சு. ஒரே மாதிரி கதைகள்; வேடங்கள். அந்தப் படங்களால யாருக்கும் எந்த லாபமும் வராது. கொஞ்சம் இடைவெளி விட்டேன். இதனால விஜய், அஜீத், விக்ரம், பிரசாந்த், சிம்பு, தனுஷ்னு ஒரு தலைமுறைக்கு டான்ஸ் பண்ண முடியாமப் போச்சு.

எனக்குள்ளேயும் ஒரு இயக்குனர் அப்பப்போ எட்டிப் பார்ப்பான். என் டான்ஸுலகூட குட்டிக் குட்டிக் கதை, புது விஷயங்கள் எல்லாம் இருக்கும். அந்தச் சமயம் பார்த்து எம்.எஸ்.ராஜு தெலுங்குல படம் பண்ணச் சொன்னார். எனக்கு ‘திக்’னு ஆயிடுச்சு. மத்தவங்களும் ‘ஐயையோ இவரா டைரக்ட் பண்ணப் போறாரு? படம் முழுக்கப் பாட்டு, டான்ஸ் மட்டும்தான் இருக்கப் போகுது’ன்னு பேச ஆரம்பிச்சுட்டாங்க. ஆனா நான் முதல்ல டைரக்ட் பண்ணுன தெலுங்குப் படத்துல டான்ஸே கிடையாது. நான்கு பாடல்கள்ல வெறும் பேக்ரவுண்ட் மியூசிக் தான். சித்தார்த்தும் த்ரிஷாவும் சும்மா நடந்துட்டுதான் இருப்பாங்க. படம் பிச்சுக்கிட்டுப் போச்சு.”

ஆனால் இவர் இயக்கிய இரண்டாவது தெலுங்குப் படமான ‘பௌர்ணமி’ ஃப்ளாப். “ரசிகர்களின் தீர்ப்பை மனப்பூர்வமா ஏத்துக்கறேன். 1960ல கதை நடக்கறதா பண்ணினோம். ரசிகர்கள் எதிர்பார்ப்பு வேற மாதிரி இருந்து. பெரிய பட்ஜெட்ல பரிசோதனை பண்ணிப் பார்க்கக்கூடாதுன்னு அதிலிருந்து பாடம் கத்துக்கிட்டேன்.”

ஏன் தமிழில் முதல் படம் இயக்கவில்லை என்றால், அதிரடி பதில் வருகிறது. “என்னை யாரும் இங்கே நம்பலை. நானும் சில பேருகிட்டே என் ஆசையைச் சொல்லிப் பார்த்தேன். ம்ஹூம்... அடுத்த அடிகூட வைக்க முடியலை. இப்போ ஒரு இயக்குநரா நல்லா மெச்சூரிட்டி ஆயிருக்கேன். முன்பெல்லாம் டான்ஸ் மாஸ்டரா இருக்கும்போது நான் வைச்சதுதான் சட்டம். அநியாயம் பண்ணுவேன். அந்தக் கதாபாத்திரம் அப்படி ஆடுமான்னு எல்லாம் யோசிக்க மாட்டேன். ஆனா இப்போ எது சரி, தவறுன்னு தெரியுது. அதே மாதிரி மீண்டும் ஹீரோவா நடிக்கறதுல எனக்குத் தயக்கமில்லை. நல்ல கதை கிடைச்சா நான் எப்பவும் நடிக்கத் தயார்” என்கிறார். மைக்கேல் ஜாக்ஸன்போல டான்ஸில் மட்டும் ஏன் கவனம் செலுத்தவில்லை என்றால், உதட்டைப் பிதுக்குகிறார். “மைக்கேல் ஜாக்ஸனுக்கு இசை, நடனம் மட்டும் தான் வாழ்க்கை. அங்கே படங்கள்ல பாடல்கள் கிடையாது. ஆல்பத்துல மட்டும்தான் கேட்க முடியும். இசையை மட்டுமே நம்பி தைரியமா பிழைப்பு நடத்தலாம். இங்கே பாட்டு, நடனத்துக்கான ஒரே மீடியம் சினிமாதான். அதோடு ஆல்பம் பண்ண என்னோடு வேறுசில டெக்னீஷியன்களும் சேரணும். ரொம்பக் கஷ்டம். பாரதியார் மாதிரி மன உறுதியோடு புரட்சி செய்ய என்னால முடியாதுப்பா” என்

றவர், தமது குடும்பத்தைப் பற்றியும் பேசினார்.

''அண்ணன் ராஜுக்கு டான்ஸ்னாலே வேப்பங் காய். காலை உதறி அழு வான். அவனை அப்பா ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு இழுத்துட்டு வருவார். பார்க்கப் பரிதாபமா இருக் கும். அப்புறம் நாங்க டான்ஸ் குடும்பம்னாலும் வீட்டுல சினிமா, டான்ஸ் பத்தி மூச்! ஏன் எங்க வீட்டுல ரொம்ப நானா டேப்பே இல்லாம இருந்தது. இப்பவும் எனக்கு உலக அளவிலான டான்ஸர்கள் பேரெல்லாம் தெரியாது. டீ.வி.யில பழைய தமிழ்ப் படங்களைக் கொட்டக் கொட்டப் பார்ப்பேன்.''

சக நடனக் கலைஞர் ரமலத்தைத் திருமணம் செய்ததை யும் இரண்டு குழந்தைகளுக்குத் தந்தையானதையும் ஏன் இன்ன மும் லேசுபாசாகவே சொல்கிறீர் கள் என்றால், ''இது ஊரைக் கூட்டிச் சொல்ல வேண்டிய விஷ யம். சீக்கிரமே சொல்லிடறேன். அதுவரைக்கும் ப்ளீஸ்...'' என் கிறார்.

- ச.ந.கண்ணன்

படம்: ஸ்ரீஹரி

# ''தமிழ் சினிமா என்னை நம்பல!''

## – பிரபுதேவா உருக்கம்

# "இளங்கோவன் பேச்சு எடுபடாது!"

## – தி.மு.க. அனலடி



தி.மு.கழகத்தின் ஸ்டார் பேச்சாளர் வெற்றிகொண்டான். அதிரடிப் பேச்சுக்குச் சொந்தக்காரர். கூட்டத்துக்குக் கிளம்பிக் கொண்டிருந்தவரைப் பிடித்து நிறுத்திப் பேசினோம்.

'நடிகைகள்லாம் மேடைக்கு வந்துட்டதால உங்களைப்போல கழகப் பேச்சாளர்களுக்கு மார்க்கெட் போயிடிச்சுன்னு சொல்றாங்களே...' என்று எடுத்த எடுப்பிலேயே வெற்றிகொண்டானை நாம் வெறுப்பேற்ற, மனிதர் கொஞ்சமும் அலட்டிக் கொள்ளாமல் வெற்றிலையை மடித்து வாயில் வைத்து மென்றபடியே பேசினார்.

''ஒரு காலத்துல கூத்தாடிங்கன்னு பரிகாசம் பண்ணப்பட்ட கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்குப் பெரிய அளவுல மரியாதை வாங்கிக் கொடுத்தது திராவிட இயக்க மேடைங்கதான். ஆனா இப்போ வர்ற நடிகர், நடிகைங்களுக்கு எப்படியாவது காசு சேர்க்கணும்ங்கற எண்ணம் வந்துடுச்சு. அதுக்காக யார் பின்னாலும் போகலாம்ங்கற முடிவுக்கு வந்துட்டாங்க. இவங்களால அரசியல் மேடை அசிங்கமாயிடிச்சு. ஆனா எங்களைப் போல கொள்கை இருக்கும் கட்சியோட பேச்சாளர்களுக்கு வரவேற்பு என்னிக்குமே குறையாது.'' என்றவரை விடாமல்,

'ஆனா இன்னிக்கு நடிகர்களைத் தலைவர்களாகக் கொண்ட கட்சிகள் களைகட்ட ஆரம்பிச்சிடுச்சே...' என்று சூடேற்றினோம்.

''அய்யோ பாவம் இந்தச் சின்னப்புள்ளைங்க... தோ பாருங்களேன்... இந்த கார்த்திக் தம்பி தாம் தூம்னுச்சு. இப்போ எங்க போச்சுன்னே தெரியல. அதைவிடக் கொடுமை விஜயகாந்து... அவரு என்னடான்னா நாமதான் அடுத்த முதல்வர்னு நினைச்சுக்கிட்டு தேர்தல் அறிக்கையெல்லாம் கொடுத்தாரு. இதெல்லாம் ஒண்ணுமேயில்ல'' என்று நக்கலடித்தார்.

'கட்சிப் பேச்சாளர்களைப் பொருளாதார ரீதியா சுத்தமா கண்டுக்காது தி.மு.க.ன்னு சொல்றாங்களே...



உண்மையா?' என்றால்,

"தீப்பொறி ஆறுமுகம்னு எங்க கட்சியில ஒருத்தரு இருந்தாரு. அவரு அண்ணா தி.மு.க.வுக்குப் போனப்போ அவங்க கிளப்பிவிட்ட புரளி இது. கட்சிக்குப் பேச்சாளரா வந்தாச்சுன்னா கட்சி பாதுகாப்புதான் தர முடியுமே தவிர, பணம் தந்துக்கிட்டே இருக்கணும்னு எதிர்பார்க்கக்கூடாது. வருமானத்துக்குத்தான் அரசியல்னா பேசாம பெட்டிக் கடை வச்சுக்கலாம்ல. அதுக்காக ஒண்ணுமே எதிர்பார்க்கக் கூடாதுன்னு சொல்லல. ஏதோ பெரிய ஆஸ்பத்திரிச் செலவு, பிள்ளைக்குப் படிப்பு, வேலைன்னு கேட்கறதுல தப்பு இல்ல... ஆனா, நான் வீட்டுல தான் படுத்திருப்பேன். ஐம்பதாயிரம் பணம் அறிவாலயத்துல இருந்து வந்துடணும்னு எதிர்பார்க்கறது தப்பு." என்றவரிடம்

'கூட்டணி ஆட்சி வேண்டும், உள்ளாட்சித் தேர்தலில் காங்கிரஸ் தனித்துப் போட்டியிட வேண்டும் என்றெல்லாம் அதிரடியாகப் பேசி தி.மு.க.வைச் சீண்டிக்கொண்டே இருக்கிறாரே ஈ.வி.கே.எஸ். இளங்கோவன்...' என்று முக்கியமான மேட்டருக்கு வந்தோம்.

சற்றே நிதானித்த வெற்றிகொண்டான், "அவங்களோட கமிட்டி கூட்டங்கள்ல அவங்க உணர்வுகளை வெளிப்படுத்தற மாதிரி பேசியிருக்காரு. இப்போ நானே இருக்கேன். என்னைச் சுத்தி பத்து கட்சிக்காரங்க நிக்கறாங்கன்னு வச்சுக்குவோம். அப்போ நான் அவங்களைப் பார்த்து, 'உன்னை வாரியத் தலைவராக்குறேன்', 'நீதான் அடுத்த ஒன்றியத் தலைவர்'னு சொல்றேன். உடனே அது நடந்துடுமா... அது மாதிரிதான் இதுவும். அவங்க கட்சியைப் பொறுத்தமட்டில் சோனியாதான் எல்லா முடிவையும் எடுக்க முடியும். மத்த எந்தப் பேச்சுக்குமே அரசியல் அங்கீகாரம் கிடையாது. இளங்கோவன் பேச்செல்லாம் எடுபடாது'' என்றார் அலட்சியமாக.

- ஆர்.முத்துக்குமார்

# மாதா அமிர்தானந்தமயி

நம் எல்லோரிடமும் ஆசைகள் இருக்கின்றன. அவை நிறைவேறலாம், அல்லது நிறைவேறாமல் போகலாம். 'மனிதனின் ஆசைகள் அனைத்தும் ஏன் நிறைவேறுவதில்லை?' என்று பலரும் அம்மாவிடம் கேட்பதுண்டு. அதற்கு அம்மா, "நாம் ஆசைப்படுபவை அனைத்தும் நிறைவேறினால், இந்த உலகின் சமநிலை குலைந்து போகும்" என்று பதில் அளிப்பேன்.

ஒரு மருத்துவர், தன்னிடம் அதிகமான நோயாளிகள் வரவேண்டும் என்று ஆசைப்படுவார். ஆனால், மக்களில் யாருக்காவது நோய்வாய்ப்பட வேண்டும் என்று ஆசை இருக்குமா? ஒரு வக்கீல், தன்னை நாடி அதிக அளவில் கட்சிக்காரர்கள் வர வேண்டும் என்று விரும்புவார். அது நிறைவேற வேண்டுமானால், மக்களிடையே சண்டை சச்சரவுகள், திருட்டு, கொலை, கொள்ளை போன்ற குற்றங்கள் அதிகரிக்க வேண்டும். மது வியாபாரி, நிறைய பேர் குடிக்க வேண்டும்; தனது விற்பனை அதிகரிக்க வேண்டும் என்று ஆசைப்படுவார். ஆனால் பெற்றோர்கள், தங்களுடைய பிள்ளைகள் குடிகாரர்களாக ஆவதை விரும்புவதில்லை.

எவரும் இறந்துபோக ஆசைப்படுவதில்லை. வசதி படைத்த சிலர், தாங்கள் இறந்தபிறகு தங்களுடைய உடம்பை, விஞ்ஞானபூர்வமாக உறைநிலையில் பதப்படுத்திப் பாதுகாப்பாக வைக்க ஆசைப்படுகிறார்கள். ஏனெனில், விஞ்ஞானம் என்றாவது ஒரு நாள் இறந்த உடலுக்கு உயிரூட்டும் முறையைக் கண்டுபிடித்து விடும் என்று அவர்கள் நம்புகிறார்கள். இருந்தாலும், சவப்பெட்டி தயாரிப்பவர்களும், சுடுகாட்டில் இருக்கும் வெட்டியான்களும் எதற்கு ஆசைப்படுகிறார்கள்? அவர்களது வருமானம் பெருக வேண்டும் என்றுதானே?

இப்படி ஆழமாகச் சிந்தித்துப் பார்க்கிறபோது, எல்லா மனிதருடைய எல்லா ஆசைகளும் நிறைவேறுமானால், குழப்பமும், முரண்பாடுகளுமே நிலவும் என்பது தெளிவாகிறது. உண்மையில், மனிதர்களின் ஆசைகளில் ஒரு சிலவாவது நிறைவேறாமல் போவதால்தான் உலகில் சமநிலை ஓரளவாவது நிலைத்திருக்கிறது எனலாம்.

மேலும், புறத்திலிருந்து நாம் பெறும் சுகங்கள் அனைத்தும், உண்மையில் அகத்தில் ஏற்படும் நிஜமான ஆனந்தத்தின் நிழலேயாகும். அதாவது அது கடனாக, கற்பனையாகப் பெறப்பட்ட சுகமாகும். புறப்பொருட்களில் சுகமில்லை. புறப்பொருட்களிலிருந்து பெறுவதாக நாம் கருதும் சுகம், உண்மையில் நமக்குள்ளே இருக்கும் ஆத்மானந்தத்தின் பிரதிபலிப்பே ஆகும். எனவேதான் குழந்தைகள் அற்பப் பொருள்களைக்கூட சுகம் தருபவையாகக் கருதுகின்றனர்.

# ஆனந்தத்தின் நிழல்!



நமது எதிர்பார்ப்புகள் பல காரணங்களால் நமக்குத் துன்பத்தைத் தருகின்றன. எதிர்பார்த்தது நிறைவேறாவிட்டால் ஏமாற்றமடைகிறோம். இத்தகைய ஏமாற்றத்தால் சிலர் கோபமடைகிறார்கள். மற்றவர்கள் மன உளைச்சலுக்கும், மனத்

## அன்பெனும் மழையிலே...

தளர்ச்சிக்கும் ஆளாகிறார்கள்.

**நா**ம் எதிர்பார்க்கிறபடியே காரியம் நிறைவேறினாலும்கூட, நமக்குத் துன்பம் நேரிடலாம். ஒரு காரியம் நிறைவேறிய வுடன், நம்முடைய மற்ற எதிர்பார்ப்பு களும் நிறைவேற வேண்டும் என்று ஆசைப்படுகிறோம். இது பேராசையாக வடிவெடுக்கிறது. அந்தப் பேராசை வலுப்பெறுகிறது. இவ்வாறு வலுப்பெறும் பேராசைக்கும் எதிர்பார்ப்புக்கும் ஏற்ப நமது துன்பம் அதிகரிக்கிறது.

நம்மிடையே எதிர்பார்ப்பே இருக்கக் கூடாது என்பது இதன் பொருளில்லை. நமது எதிர்பார்ப்பு நிறைவேறாத போதும் கூட, நாம் துன்பம் அடையாமல் அமைதி யாக இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

நமது செயல்களுக்குப் பலவிதமான பலன்களும் விளைவதற்கு வாய்ப்பு உள் ளது. உதாரணமாக, நமக்கு நோய் வந்து விடுகிறது. டாக்டரிடம் போகிறோம். அவர் அதற்கு மருந்து தருகிறார். அந்த மருந்தை நாம் சாப்பிட்டவுடன் நமது நோய் பூரணமாகக் குண மாகிவிட வேண்டும் என்றே நாம் எதிர்பார்க்கிறோம். ஆனால், மருந்தின் பலன் எப்படி வேண்டுமானாலும் இருக் கலாம் என்பதை நாம் சிந்தித் துப் பார்க்க வேண்டும்.

மருந்தைச் சாப்பிடுவ தால், நோய் பூரணமாகக் குணமாகலாம், அல்லது ஓரளவு குணமாகலாம், அல்லது நோய் குண மாகாமலும் போக லாம். இல்லையென் றால் மருந்து சாப் பிட்டதால் அலர்ஜி அல்லது வேறு ஏதாவது பக்க விளைவுகள் தோன்றலாம். எந்த விதமான பலன் விளைந் தாலும், அதை ஏற்றுக்கொள்ள நாம் தயாராக இருக்க வேண்டும்.

இந்த உதாரணத்தை நம் முடைய வாழ்க்கைக்கும் பொருத் திப் பார்க்கலாம். நாம் வாழ்க்கை யில் செய்கிற ஒவ்வொரு செயலும்,



பின்வரும் விளைவுகளை ஏற்படுத்தலாம். நாம் என்ன பலனை எதிர்பார்த்து ஒரு செயலைச் செய்கிறோமோ அந்தப் பலன் விளையலாம். நாம் எதிர்பார்த்ததற்கும் அதிகமான பலன் நமக்குக் கிடைக்கலாம்; எதிர்பார்த்ததற்குக் குறைவான பலன் கிடைக்கலாம்; நம்முடைய எதிர்பார்ப்புக்கு நேர் எதிரான பலன்கூட விளையலாம் அல்லது நல்லது நடக்கும் என்று நாம் எதிர்பார்த்து நாம் செய்கிற ஒரு செயலால் கெட்டதுகூட நிகழலாம்.

ஆக, நாம் ஒரு செயலைச் செய்யும் போது, மேற்கூறிய பலன்களில் ஏதாவது ஒன்றுதான் நிகழும் என்பதை நாம் உணர்ந்திருக்கவேண்டும். அந்தப் பலன் எதுவானாலும் அதனை மன அமைதியோடு ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்க வேண்டும். இந்தக் கோட்பாட்டை முழுமையாகக் கடைப்பிடிப்பதுதான் உண்மையான மனப்பக்குவமாகும்.

**நா**ம் நாள்தோறும் உண்ணும் உணவால், நம் உடல் உயரமாகவும், பருமனாகவும் வளர்கிறது. ஆனால் மனம் வளர்வதில்லை; அதாவது பக்குவப்படுவதில்லை. நமது மனதைப் பக்குவப்படுத்துவது, உடலை வளர்ப்பதைவிட முக்கியமானது. மன வளர்ச்சிக்கு அவசியமான உணவையும் நாம் அளிக்க வேண்டும்.

**(அன்பு பெருகும்)**

## அம்மா!



**ஒ**ருநாள் அம்மாவுக்கு ஏற்பட்ட தியான அனுபவம் வித்தியாசமானது. அது குறித்து அவரே சொன்னது இது :

தியானத்தில் ஆழ்ந்திருந்தபோது, திடீரென்று கோரைப் பற்களும், நீண்ட நாக்கும், அடர்ந்து நீண்ட கருங்கூந்தலும், சிவந்த விழிகளும் கொண்ட காளி தேவி என்னைத் துரத்துவதுபோல உணர்ந்தேன். உடனே காளியிடமிருந்து தப்பிக்க நினைத்து ஓட ஆரம்பித்தேன். அதன்பின், 'நானே காளி' என்று உணர்ந்தேன். அடுத்த நிமிடம் என் கைகளில் வீணை இருப்பதாக உணர்ந்தேன். தலையில் தேவியின் கிரீடம். 'அதெப்படி நான் தேவியாக முடியும்?' என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். அடுத்து சிவனைத் தியானம் செய்தேன். தலையில் நாகம், ஜடாமுடியுடன் நானே சிவனாக உணர்ந்தேன். அடுத்து விநாயகரைத் தியானித்தபோது, எனக்கு விநாயகரின் திருஉருவம் ஏற்பட்டுவிட்டதாக உணர்ந்தேன்.

இப்படி இறைவனின் எந்த வடிவைத் தியானித்தாலும், நான் அந்த உருவாகவே மாறுவதாக உணர்ந்தேன். அப்போது என்னுள்ளே இருந்து ஒரு குரல், "இவர்கள் அனைவரும் உன்னுடன் என்றைக்கோ கலந்துவிட்டார்கள். அப்படி இருக்க, நீ ஏன் எல்லா தெய்வங்களையும் அழைக்கிறாய்?" என்று கேட்டது.

அதன் பிறகு தெய்வ உருவங்களைத் தியானிப்பதை அம்மா நிறுத்திவிட்டார். எங்கும் நிறைந்த நாத பிரம்மமாகிய 'ஓம்' அவருக்குள்ளே மிக இனிமையாக ஒலித்தது. அந்த நாத வெள்ளத்தில் அம்மாவின் உள்ளம் கரைந்தது. ஆனாலும், அம்மா இன்றும் தொடர்ந்து தியானம் செய்து கொண்டிருக்கிறார். இது பற்றிக் கேட்டால், "தியானத்தின் மூலமாக அம்மா குழந்தைகள் அனைவரிடமும் குறிப்பாக, அம்மாவை மனமுருக நினைப்பவர்கள் மற்றும் கஷ்டப்படுகிறவர்களிடம் செல்கிறேன்" என்கிறார்.

**- மௌலி**

"என்ன வேதாளம், துள்ளிக் குதிச்சுக்கிட்டே இருக்கியே... என்ன விஷயம்?" என்றான் விக்ரமாதித்தன்.

"இரண்டு குட்டீஸ் புக் படிச்சேன். ரொம்ப நாள் கழிச்சு ஒரு பொம்மை போட்ட புக். மர்ம வீரன் ராஜராஜசோழன். 'பொன்னியின் செல்வன்'ல வர்ற அதே அருள்மொழி, குந்தவை, புத்த பிட்சு, பழுவேட்டரையர். சித்திரக் கதையில சொல்லியிருக்காங்க. இந்த மாதிரி சித்திரக் கதைகள் இப்போ ரொம்பக் குறைஞ்சு போச்சு. வசனங்களை இன்னும் கொஞ்சம் ஷார்ப் செஞ்சிருக்கலாம். அதே மாதிரி சில கமெண்ட்ஸ் திரும்பத் திரும்ப வருது. இதையெல்லாம் தவிர்த்திருந்தாங்கன்னா புக் இன்னும் நல்லா வந்திருக்கும்."

"இன்னொரு புக் என்ன?"

"டாக்டர் பூவண்ணன் எழுதியிருக்கிற புதையல் வீடு. அமர்க்களமான புக். கற்பனா சக்தியைத் தூண்டிவிடற மாதிரி எழுதியிருக்காரு. சுவாரஸ்யமான சம்பவங்களோட கதையை ஜெட் வேகத்துல கொண்டு போயிருக்காரு. சிற்பக் கலையைப் பத்தி நிறைய தெரிஞ்சுக்க முடியும். இந்த மாதிரி புக்ஸ் நிறைய வந்தா ரிமோட் கண்ட்ரோலைத் தூக்கிப் போட்டுட்டு நிறைய குழந்தைங்க ஆர்வமா படிப்பாங்க. அதே மாதிரி இன்னொரு துறையிலயும் நமக்கு நிறைய புக்ஸ் தேவைப்படுது."

"அது என்ன?"

"பயணப் புத்தகங்கள். நாலு ஊரைப் பத்தித் தெரிஞ்சுக்கணும்னா அதுக்கான புக்ஸ் இருக்கணும். தமிழ்ல இது குறைச்சல். இப்போ ஒரு புக் படிச்சேன். செட்டிநாடு - ஊரும் பேரும். செட்டிநாட்டுல இருக்கிற ஒவ்வொரு ஊருக்கும் அந்தப் பேரு எப்படி வந்ததுன்னு ஆதாரங்களோட சொல்லியிருக்காரு. சுவாரஸ்யமான செய்திகளும் இருக்கு. இந்த மாதிரி நிறைய புக்ஸ் வரணும்."

"சரி, இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லு. செட்டிநாட்டுல மொத்தம் எத்தனை ஊர் இருக்கு?"












# வேதாளபுரி நூலகம்!

"74" என்று சரியான பதிலைச் சொல்லிவிட்டுப் பறந்து சென்றது வேதாளம்.

**மர்மவீரன் ராஜாராஜாசோழன், சந்திரோதயம் தங்கப்பதுமை பதிப்பகம், ஞானம் நகர், 6வது தெரு மேற்கு, மாரியம்மன் கோயில், தஞ்சாவூர் - 613 501. பக்கம் 136, விலை ரூ.60/-**

**புதையல் தீவு, டாக்டர் பூவண்ணன், சாதனா பதிப்பகம், 264ஏ, டாக்டர் அம்பேத்கர் சாலை, வேலாண்டிப் பாளையம், கோவை - 641 025. பக்கம் 128, விலை ரூ.50/-**

**செட்டிநாடு - ஊரும் பேரும் பழ.அண்ணாமலை, வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 600 017. பக்கம் 126. விலை ரூ.40/-**

# சும்மா ஒரு

"பாட்டி, நான் அகிலா பேசறேன். ஸான் ஹோசேலேர்ந்து?"

"அகிலாவா? ஏண்டி வாலு? எப்படி இருக்கே? அமெரிக்காலேர்ந்து பேசறது பக்கத்திலே என் கழுத்தைக் கட்டிண்டு பேசறா மாதிரி கிளியரா இருக்கு."

"அதான் டெக்னாலஜி. பாட்டி, கேளேன் ஆர்கன்ஸா போயிருந்தேன். எதுக்குத் தெரியுமா? பிள்ளை பார்க்க!"

"எ..எ.. என்னது பிள்ளை பாக்கவா? என்ன கூத்துடி இது? பொண்ணைப் பாக்கன்னா பிள்ளை வருவான்."

"அதெல்லாம் அந்தக் காலம். ஆர்கன்ஸாலே ரமணின்னு ஒரு பையன். நெட்டிலே சிக்கினான். பாத்துட்டு வருவமேன்னு பதினாலு மணி நேரம் காரை ஓட்டிண்டு போனேன்.

"தனியாவா?"

"கூடவே கெவின் லிட்டில் வந்தாரே?"

"அது யாருடி கெவின் லிட்டில்?"

"பயந்துட்டியா? என்னோட ஃபேவரிட் பாப் சிங்கர். கார் ரேடியோல பாடிண்டே வந்தார். ஸ்டியரிங்கிலே தாளம் போட்டுண்டே வண்டியை ஓட்டிண்டு ஆர்கன்ஸா போய்க் கதவைத் தட்டினேன். ரமணி கதவைத் திறந்தான். சமத்து, பிள்ளை பாக்க வரப்போறேனேன்னு ஃபார்மலா டிரெஸ் பண்ணிண்டு இருந்தான். வீடு நீட்டா இருந்தது. நன்னா வக்கணையா சமைப்பானாம்."

"என்னடி இது. அடுத்ததா சொஜ்ஜி பஜ்ஜி பண்ணி வெச்சுருந்தான்னு சொல்லுவே போலருக்கு?"

"சொஜ்ஜியாவது? பஜ்ஜியாவது? அதெல்லாம் ஊசிப் போயாச்சு. கும்முனு பீட்ஸாவும், டோநட்ஸும் வாங்கி வெச்சிருந்தான். குடிக்க டயட் கோக்."

"நமஸ்காரம் எல்லாம் உண்டா?"

"பா...ட்டி, யார் யாரை நமஸ்காரம் செய்யறது. 'ஹாய்... ஹாய்' மட்டும்தான்."

"என்ன பேசினேன்? விவரத்தைச் சொல்லு."

"வரேன். நம்மூர்லே எல்லாம் பத்து பொருத்தம் பார்ப்பாங்களே. அது மாதிரி..."

"அட! உனக்குத் தினப் பொருத்தம், ரஜ்ஜு பொருத்தம், ராசிப் பொருத்தம் எல்லாம் பாக்கத் தெரியுமா?"

"காட்! அதெல்லாம் இல்லே. நான் பாக்கிற பொருத்தமே வேற. மொதல்லே உருவம். செவப்பா, அழகா, உயரமா, மழமழன்னு ஷேவ் பண்ணிண்டு அம்சமா இருந்தான். எனக்குப் பிடிச்சது மீசை வெச்சுண்டு என் நிறத்தைவிடக் குறைவா, ஒரு முரட்டுத்தனத்தோட ஜீன்ஸ் போட்டுண்டு இருக்கிற மேன்லி ஃபிகர். அதிலேயே அவுட்."

"ஃபோட்டோலேயே பாத்தா தெரிஞ்சிருக்குமே. ஏன் நீட்டி முழக்கிண்டு போனே?"

"சும்மா ஒரு கிக்குக்குத்தான். அடுத்தது பொஸிஷன். அவன் டீம் லீடர். ஆனா நான் டீம் மேனேஜர். ஒரு படி மேலே. அதிலேயும் பிராப்ளம்."

"அப்புறம்?"

"அவன் இருக்கிறது ஆர்கன்ஸாவிலே. அமெரிக்க குக்கிராமம் அது. நான் இருக்குறது ஸான்ஹோஸே. மூணு வருஷம் அந்தூர்லே இருந்தும் ஆர்கன்ஸான்னு சொல்றான். Arkaansasலே கடைசி

# கிக்குக்குத்தான்!

'எஸ்' ஸைலன்ட்டுங்கிற சூட்சமத்தை இன்னும் தெரிஞ்சிக்கலே. க்ஷேமம்.

அப்புறம் அவன் வேலை செய்யற கம்பெனி. குட்டிணியூண்டு. நியூயார்க் ஸ்டாக் எக்ஸ்சேஞ்சிலே இன்னும் உக்காரலே. நாஸ்டாக் வாசனை எல்லாம் தெரியாத பச்சைப் பிள்ளை கம்பெனி.

பாட்டீ என்ன கார் வெச்சிருக்கான் தெரியுமா? டோயோட்டா கொரோலா. அமெரிக்கக் குசேலர்கள் ஓட்டறது. அடக்கத்தோட அவன் வீட்டு வாசல்லே நின்னிண்டு இருந்தது. அந்த வண்டிக்குப் பக்கத்திலே என்னோட பி.எம்.டபிள்யூவை வெண்ணெயா நிறுத்தினபோது கொரோலா வெக்கத்தோட ஒரு இஞ்ச் நகந்திண்டா மாதிரி இருந்தது. கார் பொருத்தமும் போச்சு."

"காபி போட்டுக் குடுத்தானா?"

"ஆத்தி ஆத்திக் குடிக்கிற டிகாஷன் காபி. நான் தொடலே. எனக்குப் பிடிச்சது ஸ்டார்பக்ஸ் காபிதான். அவனுக்குக் கப்பூச்சினோனா உவ்வேயாம்."

"இழிஞ்சிது போ."

"அப்புறம் பாலிடிக்ஸ். அப்பிராணியா இன்னும் புஷ்ஷை சப்போர்ட் பண்றான். சண்டைன்னு வந்தா புஷ்ஷை"தான் லோகத்தை ரட்சிப்பாராம். கெர்ரி ஓடிப்போயிடுவாராம். இவனைத் தூக்கி பின்லேடன்கிட்டே வீச வேண்டாம்?"

"போறுண்டி. இதெல்லாம் அவன்கிட்டே போன்லே பேசிக் கேட்டுத் தெரிஞ்சிண்டு போகாம இருந்திருக்க வேண்டியதுதானே. ஏன் அவ்வளவு தூரம் கார்லே போய் டயத்தை வேஸ்ட் பண்ணினே. திமிர்தானே?"



"பாட்டீ, நீ எவ்வளவு தடவை சொல்லிருக்கே - எங்கம்மாவை இருபத்தி ஏழு பேர் பெண் பாத்துட்டு வேண்டாம்னு சொன்னாள்னு. அவங்க எத்தனை கிலோ கேசரி தின்னிருப்பாங்க. எத்தனை டஜன் பஜ்ஜி வெட்டி இருப்பாங்க. எத்தனை சொம்பு காபி குடிச்சிருப்பாங்க. எவ்வளவு வயத்தெரிச்சலைக் கொட்டியிருப்பாங்க."

"அதனாலே?"

"இந்த ஜெனரேஷன்லே நா பதிலடி குடுக்கிறேன்."

"நல்ல நியாயம்டி. யாரோ எப்பவோ பண்ணின தப்புக்கு இப்போ இருக்கிற ரமணிகள் என்ன பண்ணுவான்கள்? உன் அப்பா உன்னைச் செல்லம் கொடுத்து குட்டிச்சுவராக்கிட்டான். அது சரி, கடைசியா அவன் கிட்டே என்ன சொன்னே? உங்கம்மாவை அலைக்கழிச்சவா மாதிரி, 'ஊருக்குப் போய் லெட்டர் போடறேன்'னு அமுக்கமா சொல்லி வெச்சியா?"

"இல்லே பாட்டி."

"நல்லவேளை. பின்னே என்ன சொன்னே?"

"ஊருக்குப் போய் இ-மெயில் போடறேன்னு சொல்லிட்டு டாட்டா காட்டிட்டேன்."

**- ஜே.எஸ்.ராகவன்**

# அருள்வாக்கு

# ஒரே ஆத்மா!

'தேஹம் ரொம்ப இழிவானது. இதிலிருந்து விடுபட வேண்டும்' என்று பெரியவர்கள் பாடி வைத்திருப்பதெல்லாம் உண்மைதான். ஆனால் இன்னொரு நிலையில் பார்த்தால் இந்த தேஹம் என்பது ஒரு மஹா அத்புதமான மெஷினாக இருக்கிறது. ஒரே மெஷினில் ஒவ்வொரு பாகம் ஒவ்வொரு தினுஸான கார்யத்தைச் செய்கிறது. கண் என்று ஒன்று வெளிச்சத்தையும், வர்ணங்களையும் பார்க்கிறது. காது என்று ஒன்று சப்தங்களைக் கேட்கிறது. இருக்கிறதெல்லாம் ஒரே ஆத்மா - இத்தனை அவயவங்களுக்குள்ளேயும் ஒரே ஜீவன்தான் இருக்கிறது என்றாலும் கண்ணும், காதும் கிட்டக் கிட்ட இருந்தும்கூட கண்ணால் கேட்க முடிவதில்லை; காதால் பார்க்க முடிவதில்லை. பக்கத்திலேயே வாய் என்று ஒன்று, அதற்குத்தான் ருசி தெரிகிறது. பேசுகிற சக்தியும் அதற்கே இருக்கிறது. தொண்டையில் பல தினுஸாகக் காற்றைப் புரட்டி அழகாக கானம் செய்ய முடிகிறது. பல வஸ்துக்களைப் பிடிப்பதற்கு ஏற்ற மாதிரி கையும் விரல்களும் அமைந்திருக்கின்றன.

எலும்புக்குள்ளேகூட மஜ்ஜை என்ற ஜீவஸத்து ஓடுவது ஒரு அதிசயம். மனித சரீரத்தில் இருக்கும் கோடிக்கணக்கான ஸெல்களில் ஒவ்வொன்றும் ஒரு அத்புத லோகம். இப்படித் தனித் தனியாக ஒவ்வொரு பாகமும் ஒரு அத்புதமான மெஷினாக இருப்பதோடு மட்டுமல்லாமல், எல்லாமாக ஒன்றுக்கொன்று இசைவாக ஸஹாயம் செய்து போஷித்துக் கொள்வதும் மஹா அதிசயமாக இருக்கிறது. ஆனபடியால், எவனோ லக்ஷத்தில் ஒருவன் தேஹம் பொய், மனஸ் பொய் என்று புரிந்து கொள்ளும் ஞானியாக ஆனாலும், பாக்கி எல்லோரும் பகவான் தந்திருக்கிற இந்த அத்புதமான மெஷினை வைத்துக்கொண்டு தர்மமாக வாழத்தான் முயற்சி பண்ண வேண்டியவர்களாக இருக்கிறோம். இந்த தர்ம வாழ்க்கையிலிருந்துதான் அப்புறம் ஞானத்துக்குப் போக வேண்டியவர்களாயிருக்கிறோம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்




# கறுப்பு வெள்ளை சிவப்பு!

பார்பரா எப்ஸ்டீன் என்று சொன்னால் யாருக்கும் தெரியாது. மிகச் சிறந்த எடிட்டர், அற்புதமான பெண்மணி என்று சொன்னால்கூட அதிகபட்சமாக 'அப்படியா?' என்று கேட்டு விட்டு ஒதுங்கிவிடவே தோன்றும். ஆனி பிராங்கின் டைரியை எடிட் செய்து, அது அச்சாவதற்கு மூலகாரணமாக இருந்தவர் இவர்தான் என்று சொன்னால்தான் அவரது சாதனையின் முழு வீச்சும் புரியவரும்.

இரண்டாம் உலகப் போர் பற்றிய அழுத்தமான பதிவுகளில் ஒன்றாக இன்று வரை பாராட்டப்படும் முக்கிய ஆவணம் ஆனி பிராங்கின் டைரி. மிக மிகக் குட்டிப் பெண்தான் இந்த ஆனி. தனது பதின்மூன்றாவது வயதில் பிறந்தநாள் பரிசாக வந்து சேர்ந்த டைரியில் விளையாட்டாகத்தான் எழுதத் தொடங்கினாள். 'இன்னிக்கு வெயில் ஜாஸ்தி, நடக்கவே முடியலை', 'ஐயோ க்ளாஸ் கத்த போர்!' என்கிற ரீதியில்தான் அவளது எழுத்துக்கள் முதலில் அமைந்திருந்தன.

நாட்கள் செல்லச் செல்ல, அவளது டைரி அன்றைய ஜெர்மனியைப் பிரதிபலிக்கும் நிலைக் கண்ணாடியாக மாறிப் போனது. யூதர்களைப் பற்றியும், அவர்கள் அனுபவிக்கும் கொடுமைகளைப் பற்றியும் ஆனி பதிவு செய்யத் தொடங்கினாள். தனது பதினாறாவது பிறந்த நாளுக்கு மூன்று மாதங்களுக்கு முன்பு 'கான்சன்ட்ரேஷன் கேம்ப்'பில் இறந்துபோனாள் ஆனி.

பார்பரா எப்ஸ்டீனுக்குத் திரும்புவோம். 1952-ல் ஆனியின் டைரி முதல் முறையாக அச்சானது இவரால்தான். குட்டிப்பெண் ஆனியின் எழுத்துக்களைச் சிவப்பு மை கொண்டு சீரமைத்ததும் இவர்தான். ஆனியின் தந்தை ஓட்டோ பிராங்கோடு இவருக்கு நல்ல பரிச்சயம் இருந்திருக்கிறது. கோல் விடால், ஜாய்ஸ் கரோல் ஓட்ஸ் போன்றவர்களின் எழுத்துக்களை நிர்தாட்சண்யமின்றி கோடு போட்டு, அடித்துத் திருத்தி ரகளை செய்தவர்.

40 வருடங்களாக எழுத்துக்களோடு இணைபிரியா சிநேகம். [illegible] பக்க புத்தகத்தைக் கொடுத்தால், ஒரே புரட்டில் புரட்டி அதிலுள்ள தவறுகளைப் பிடித்து வெளியே இழுத்து வந்து, காதைப் பிடித்துத் திருகிப் பழுது பார்த்து விடுவார். சென்ற வாரம் மன்ஹாட்டனில் இவர் காலமானபோது இவரது வயது 76.

கறுப்பு வெள்ளை எழுத்துக்களைக் கொண்டாடும்போது கூடவே பார்பரா எப்ஸ்டீன் போன்ற சிவப்பு மைப் போராளிகளையும் தாராளமாகக் கொண்டாடலாம். சிவப்பு இல்லாவிட்டால் கறுப்பு வெள்ளை சாத்தியம் இல்லை.

- மருதன்

““பாவனா நீ குண்டாயிட்டே வர்றே. எண்ணெய் ஆகாரம் எல்லாம் சாப்பிடக் கூடாது'ன்னு எங்க ஃபேமிலி டாக்டர் ஒருமுறை எச்சரித்தார். 'சரிங்க டாக்டர்'னு சமர்த்தா தலையாட்டிட்டு நேரா நான் போனது சிப்ஸ் கடைக்குத்தான். எண்ணெய்ல பொரிச்ச எந்த உணவைக் கொடுத்தாலும் ஒரே மூச்சுல...ஏவ்!''

'சித்திரம் பேசுதடி' பற்றிப் பேசுவதைவிட உருளைக் கிழங்கு சிப்ஸ் பற்றிப் பேசத்தான் அதிக ஆர்வம் காட்டுகிறார் பாவனா. கேரளப் பெண்ணான இவருக்குத்தான் இப்போது தமிழ் சினிமாவில் ஏக கிராக்கி. சரி, சரி.... பாவனாவோட சாப்பாட்டுப் புராணத்தைத் தொடர்ந்து கேக்கலாம்...

"கேரள மக்கள் நல்லாச் சாப்பிட்டு நாலு வேளையும் சிரமம் பார்க்காம உழைக்கக்கூடியவங்க. இன்னும் கேரளாவோட கலாசார உணவுகள் அழியல; எந்தப் பீட்ஸாவாலும் அழிக்க முடியாது. எல்லா கேரள உணவுலயும் தேங்காய் எண்ணெய் கட்டாயம் கலந்திருக்கும். அப்பளம், சிப்ஸ் எல்லாம்கூட தே.எண்ணெய்லதான் பண்ணுவாங்க. வீட்டுக்கு வீடு தென்னை மரம் இருக்கிறதால உண்டான சௌகரியம்.

இங்கே ஓணம், திருமணம் மற்றும் பிறந்தநாள்ல 'ஷத்யா'தான் ஹீரோ. சாதம், சாம்பார், பருப்பு, பப்படம் (அப்பளம்), அவியல், கூட்டுக்கறி, இஷ்டு (உருளைக்கிழங்கு கிரேவி)ன்னு பல ஐயிட்டங்களைக் கலந்து கட்டின பண்டம் 'ஷத்யா'. கேரள உணவோட முக்கிய அடையாளம்.

காலை உணவுக்குப் புட்டுதான் எங்க ஊர்ல ஃபேமஸ். கடலைக்கறி, பப்படம், வாழைப்பழம், மாம்பழம் எல்லாம் கலந்து நான் புட்டு சாப்பிடுவேன். எங்க ஊர்ல பலாப்பழ விளைச்சல் அதிகம். அதனாலேயே சாப்பிட ஆளில்லாம, பயனில்லாம கீழே விழுந்து

# “எண்ணெய்க்காக

கிடக்கும். கேரளாவுல இதுக்குப் பெயர் சக்கப்பழம். பலாப்பழம், நேந்திரம்பழம் (பழம் பொறி) ரெண்டையும் தேங்காய் எண்ணெய்ல பொறிச்சு சிப்ஸா சாப்பிடுவோம். பழம்பொறியோட டேஸ்ட்டுக்கு மயங்காதவங்களே இருக்க முடியாது.

தமிழ்நாட்டுல கீரையையும் புதினாவையும் திரவம்போல சாப்பாட்டுல பிசைஞ்சு சாப்பிடறதை அதிசயமாப் பார்த்தேன். அங்கே புதினாவை சும்மா உணவு மேலே தூவுவோம். கீரையை வறுத்துத்தான் சாப்பிடுவோம். அப்புறம் எங்க ஊர்ல பொங்கல்ங்கிற வஸ்துவே கிடையாது.

சரியான சாப்பாட்டு ராமி (?!) நான். சாப்பிடறதுக்கு நேரம், காலம், அளவு எதுவும் பார்க்க மாட்டேன். எனக்கு ஸ்வீட், ஐஸ்க்ரீம், சாக்லெட் எதுவும் பிடிக்காது. எண்ணெய்க்கு நான் அடிமை. எண்ணெய்க்காக என்னையே தருவேன். கேரளவாசிகளுக்கு எண்ணெய்ல முக்காத எந்த உணவும் ருசிக்க மாட்டேங்குது. இன்னமும் தமிழ்நாட்டு உணவு வகைகள் என் நாக்குக்கு ருசிக்கலை. தயிர், அப்பளம் மட்டும்தான் என் மூணு நேர உணவு.

நடிகையான பின்னும் தேங்கா எண்ணெய், நெய்ல பண்ணின உணவுகளைத்தான் எப்போதும் சாப்பிடுவேன். நான் இவ்வளவு சாப்பிட்டாலும் 70 எம்.எம். சைஸுக்குக் குண்டாகலை. மத்த நடிகைகள் மாதிரி தினமும் ஜிம்முக்கெல்லாம் போய் வேர்க்க, விறுவிறுக்க உடற்பயிற்சி பண்ணலை. அட! என்னை மாதிரி நீங்களும் 'சிக்'னு இருக்க ஆசைப் படறீங்களா? ஒரு சின்ன டிப்ஸ் - மொறு மொறுன்னு நீங்க மூணுவேளையும் சாப்பிடலாம். ஆனா எதுவாயிருந்தாலும் தேங்காய் எண்ணெய்ல செஞ்சதா இருக்கணும். இப்படிச் சாப்பிட்டா ஸ்லிம்மா இருப்பீங்க, என்னை மாதிரி!"

- சநகன்




ன்னைத் தருவேன்!"

'இந்தியர்களாகிய நாம் போகும் கதிக்கு வழி' தேடுவதில் நம்பிக்கை கொண்டவர்கள்; புண்ணியம் சம்பாதிக்க விரும்புகிறவர்கள். நமக்குப் புண்ணியம் சம்பாதிக்க ஒத்தாசை செய்கிறவர்கள் யார்? ஏன், பிச்சைக்காரர்கள்தான்.

இப்போது நம் தேசத்தில் பிச்சைக்காரர்கள் விஷயத்தில் எவ்விதக் குறைவுமில்லை. பொழுது விடிந்ததும், அவர்கள் ஒருவர் பின் ஒருவராக நம்முடைய வீட்டைத் தேடி வந்து கொண்டிருக்கிறார்கள்; நம்முடைய புண்ணிய மூட்டையைப் பெருக்குவதற்காகவே அவர்கள் வருகிறார்கள். அவர்களுக்குத்தான் என்ன சிரத்தை! நாம் தூங்கி விழிப்பதற்குள் வாசலில் வந்து நிற்கிறார்கள். "என்ன, அம்மா! இன்னுமா தூங்கறீங்க? எழுந்து பிச்சை போட்டுட்டுத் தூங்குங்க!" என்கிறான் அந்த அதிகாலைப் பிச்சைக்காரன். பிறகு, ஒருவர் பின் ஒருவராய் வருகிறவர்கள் ஒவ்வொரு முறையைக் கையாளுகிறார்கள். சிலர் கெஞ்சிக் கேட்கிறார்கள்; சிலர் பாடிக் கொண்டு வருகிறார்கள்; சிலர் 'லபோ லபோ' என்று கத்துகிறார்கள்; சிலர் வயிற்றில் அடித்துக் கொள்கிறார்கள். சில கறார்ப் பிச்சைக்காரர்கள், "ஒரு வீட்டிலேயே எத்தனை நேரம் காத்திருக்கிறது? உண்டுன்னா உண்டுன்னு சொல்லுங்க; இல்லேன்னா இல்லேன்னு சொல்லுங்க" என்று கண்டிப்பாய்க் கேட்கிறார்கள். "நாம்ப அரிசி வாங்கிறதில்லை; காசு கொடுத்தாக் கொடுங்க, இல்லாபோனா ஒன்றும் வேண்டாம்" என்று உலகத்தையே துச்சமாக நினைத்துப் பிச்சை கேட்பவர்கள் உண்டு. இன்னும் "நாங்க பிச்சைக்கு வரலை; திருப்பதி வேண்டுதலை" என்றும், "பிள்ளைக்குப் பூணூல்," "பெண்ணுக்குக் கல்யாணம்" என்றும் சொல்லிக்கொண்டு பலர் வருகிறார்கள். ஒரு பெண்ணும் பெறாமலே கன்னிகாதான பலனை அடைய அவர்கள் நமக்கு வழிகாட்டுகிறார்கள்.

# அவனின்றி எப்படி?



அமரர் கல்கி

மற்றும், தலையில் காந்தி குல்லாவும், சட்டையில் ஜவஹர்லால் பெண்டண்டும் தரித்து, தோளில் கதர் ஹாரவர்ஸாக்குடன் சிலர் வந்து "கண்ணனூர் சிறைச்சாலையிலிருந்து விடுதலையடைந்தோம்; ஊருக்குப் போக ரயில் சார்ஜுக்குப் பணமில்லை" என்று கேட்கிறார்கள். "ஏன்? இந்த ஊர்க் காங்கிரஸ் தலைவர்களைப் போய்ப் பாருங்களேன்" என்றால், "காங்கிரஸ் தலைவர்களா அவர்கள்? மூன்று வருஷத்துக்கு முன் அவர்களிடம் ரயில் சார்ஜ் வாங்கிக் கொண்டதை இன்னும் நினைவு வைத்துக்கொண்டு கேட்கிறார்கள்! எல்லோரும் சுயகாரியப் புலிகள்; அப்படி, இப்படி..." என்று வசைபுராணம் தொடங்குகிறார்கள். இந்த இனத்தில் இன்னும் சிலர், "வேலூர் ஜில்லா போர்டு தேர்தலுக்குப் பிரசாரம் செய்ய வந்தேன்" என்றும், "லக்னௌ காங்கிரஸுக்குப் போய் விட்டுத் திரும்புகிறேன்" என்றும் கூறுகிறார்கள். இவர்கள் உங்களிடம் கேட்பதெல்லாங் கூடி ரயில் சார்ஜுக்குத்தான். ஆனால் தரித்திரம் பிடித்த நீங்கள் ஓரணா, இரண்டணாவுக்கு மேல் கொடுப்பதில்லையாதலால் அதெல்லாம் காப்பி ஹோட்டலிலேயே செலவழிந்து, ரயில் சார்ஜுக்குப் பணம் சேர்வதேயில்லை.

இன்னும் ஒரு வகையான பிச்சையும் உண்டு. அது உங்களுடைய வாலிபப் பருவத்தின் மனோராஜ்யக் காதல் வாழ்க்கையை நினைவூட்டுவதாகும். சென்ட்ரல் ஸ்டேஷனுக்கெதிரில் நீங்கள் பஸ்ஸுக்காகக் காத்திருக்கும்போது திடீரென்று யாரோ உங்கள் தோளைத் தொட, நீங்கள் கூச்சமுற்றுத் திரும்பிப் பார்க்கிறீர்கள். ஆறரை அடி உயரமும் அதற்குத் தகுந்த அகலமும் உள்ள ஆஜானுபாகுவான ஒரு பட்டாணி ஸ்திரீ நின்று ஒரு புன்னகை புரிந்து கையை நீட்டுகிறாள். ஒரு கணம் உங்களுக்கு என்னவெல்லாமோ தோன்றி விடுகிறது. வீட்டிலே உங்கள் வரவை எதிர்



நோக்கிக் காத்திருக்கும் பரதேவையின் ஞாபகம் வருகிறது. "ஆனாலும் வாழ்க்கையில் இப்படிப்பட்ட சந்தர்ப்பங்கள் அருமையாய்த்தானே நேர்கின்றன?" என்ற ஓர் எண்ணம் மின்னல்போல் தோன்றி மறைகிறது. "பாபு! ஏக் பைஸா திஜியே!" என்ற குரலைக் கேட்டதுந்தான் சொப்பன உலகத்திலிருந்து கீழிறங்கி, "சீ! இவன் பிச்சைக்காரியா?" என்று நினைக்கிறீர்கள். உங்கள் திகைப்பைப் பார்த்துப் பக்கத்தில் நிற்பவர்கள் எல்லோரும் சிரிக்கிறார்கள். இதற்குள் பஸ் வந்துவிட, நீங்கள் அவசர அவசரமாய் ஏறி வழக்கம் போல் ஓரத்து ஸீட்டுக்குச் சண்டையிடாமல் நடுமத்தியில் பத்திரமாய் உட்கார்ந்து விடுகிறீர்கள். பஸ் கிளம்புகிறவரையில் உங்கள் இருதயம் பக்பக்கென்று அடித்துக்கொள்கிறது.

இப்படிப் பல்வேறு ரஸமான முறைகளைக் கடைப்பிடிக்கும் பிச்சைக்கார வர்க்கமே மறைந்து விடுவதை நாம் விரும்ப முடியுமா? 'ஸோஷலிஸம்' பூரணமாய் அமலுக்கு வரும்போது, அந்த வர்க்கம் இல்லாமல் போவது நிச்சயம். எல்லோருக்குமே உண்ண உணவும், உடுக்க உடையும், தங்க வீடும் இருந்துவிட்டால், யார் பிச்சை எடுக்க முன் வருவார்கள்? அத்தகைய நிலைமையில் - பிச்சைக்காரர்களே இல்லாத உலகத்தில் - உங்களையும் என்னையும் போன்ற புண்ணியாத்மாக்கள் வாழ்வதற்கே இஷ்டப்பட மாட்டோம்.

ஒரு பிடி அரிசி வாங்கிக் கொள்ள ஒரு பிச்சைக்காரன் இல்லையென்றால், வேறு எந்த வழியில் நாம் புண்ணியம் சம்பாதிப்பது? 'ஐயமிட்டு உண்' என்று அரிச்சுவடி வகுப்பிலேயே படித்தோமே, அதை எப்படி நிறைவேற்றுவது? அப்படிப்பட்ட நிலைமை ஏற்படுத்தக்கூடிய 'ஸோஷலிஸம் வேண்டாம்' என்று நாம் சொல்லாவிட்டால், வேறு எதைத்தான் வேண்டாமென்று சொல்லப் போகிறோம்.

- வானதி பதிப்பகத்தின் 'கல்கி களஞ்சிய'த்திலிருந்து...



# ஃபெக்ஸ் ஃப்ரம் டெல்லி!

தலைநகரைச் சுத்திப் பார்க்க வர்றாங்களோ இல்லியோ... டெல்லி பல்கலைக்கழகத்துல படிச்சுப் பட்டம் வாங்கணும்ங்கற ஆசையில ஏழு கடல், ஏழு மலை தாண்டி வர்றவங்களோட எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரிச்சுக்கிட்டே இருக்கு. குறிப்பா, ஆப்கானிஸ்தான், சீனா, கொரியா, இலங்கை, ஈரான், வியட்நாம்லேர்ந்துதான் அதிகப் பறவைகள், ஸாரி... மாணவர்கள் டெல்லிக்குப் படையெடுக்குறாங்க. நம்மூர்ல 'தலைநகரம்' படம் எப்படி ஹிட்டோ, அது மாதிரி டெல்லி யூனிவர்சிட்டியும் செம ஹிட். சுந்தர் சி.-க்கு நல்ல ஓபனிங் கிடைச்சா மாதிரி இங்க படிச்சவங்களுக்கு பெஸ்ட் ஃப்யூச்சர் கிடைக்காதா, என்ன?

'ஹலோ ஹம் மஹாஜன் போல் ர ஹே ஹை' - இது என்னடா புது மொழின்னு பார்க்குறீங்களா? புது மொழி இல்ல... சினி மொழி! ஆமா, பிரபல இந்திப் பட ப்ரொடியூசர் ரஞ்சித் வர்மா, மறைஞ்ச பி.ஜே.பி. ஸ்டார் பிரமோத் மகாஜனைப் பத்தி எடுக்கப் போற படத்தோட தலைப்புதான் இது! இது சம்பந்தமா ஜெயில்ல இருக்குற ப்ரவீன் மகாஜனையும் அவரோட வக்கீல் நந்தகுமாரையும் சம்பத்துல சந்திச்சுட்டு வந்திருக்காரு ரஞ்சித் வர்மா. அதுவும் 45 நாள்லயே படத்தை எடுக்கப் போறதா கங்கணம் கட்டிட்டு இருக்காரு. டைரக்டர் யாரு தெரியுமா? அம்ஜத்கான்தான்.

அடுத்த நியூஸ், அரசியல்வாதிங்களுக்கே ஆப்பு வச்சவங்களைப் பத்தினது. அண்மையில பி.ஜே.பி. உட்பட பல தேசியக் கட்சிகளைச் சேர்ந்த தலைவர்கள் பலரும் டெல்லி 'ஜன்தர் மன்தர்' பகுதியில பெட்ரோல் விலை உயர்வைக் கண்டிச்சுப் போராட்டம் நடத்தினாங்க. எல்லோரும் மும்முரமா இருந்த சமயத்துல கூட்டத்துல சில திருட்டுப் பயலுங்க நுழைஞ்சிட்டிருக்காங்க. இது யாருக்கும் தெரியல. அப்புறம் என்னாச்சு? என்ன ஆகணும்! தலைவர்களோட பர்ஸுங்க, மொபைல் போனுங்க எல்லாம் அவுட்! சுட்டுட்டுப் போனவங்களைப் பார்த்து எல்லாரும் இப்ப 'திருட்டுப் பயலே... திருட்டுப்பயலே... யாரு நீயடா?'ன்னு பாடிக்கிட்டிருக்காங்க.

இருங்க... இருங்க.... ஃபேக்ஸ் இன்னும் முடியல... கடேசியா ஒரு குண்டு. அமெரிக்கா, யு.கே. ஸ்டூடண்ட்ஸ் எல்லாம் படிக்கிறதுல ஒரு புது டெக்னிக்கைக் கையாள ஆரம்பிச்சிருக்காங்க. விழுந்து விழுந்து படிக்காம, அவங்களுக்குத் தரப்பட்ட அசைன்மெண்ட்ஸை எல்லாம் இந்தியாவுல இருக்குற மாணவர்களுக்கு, குறிப்பா, தலைநகரவாசிகளுக்கு அனுப்பிடறாங்க. இவங்க அதைக் கணினில செஞ்சு திருப்பி அனுப்புறாங்க. இந்த ரெண்டு மணி நேர வேலைக்கு 20லேர்ந்து 50 டாலருங்க வரை சம்பளம் கொடுக்கப்படுதாம். இங்கிலாந்து பிர்மிங்காம் யூனிவர்சிட்டிலதான் இந்தத் தில்லுமுல்லு அம்பலமாகியிருக்கு. குண்டை நாங்க போட்டுட்டோம்... செஞ்சவங்களை நண்டுபிடி பிடிக்கச் சொல்லி நீங்க குரலெழுப்புங்க!

**- நளினி சம்பத்குமார்**



"வெளிச்சத்தைப் பார்த்தா அநியா யத்துக்கு ரொம்பப் பயப்படறான்... அதுக்கு ஏதாவது தாயத்து மந்திரிச்சுத் தர முடி யுமா சாமி...?"

- கே. ஆனந்தன்

"நான் வாரம் ஒரு ஏழைக்கு இலவசமா ஆபரேஷன் பண்ணறது வழக்கம்..."

"ஏழைதானே... பாவம்... பிழைச்சுப் போகட்டுமேன்னு விடமாட்டீங்க போலிருக்கு..."

- எம்.ஆர். மூர்த்தி

# நன்றி மீண்டும் தருக!





"நேத்து என் பர்சை அடிச்சவன் பெரிய கில்லாடியா இருப்பான் போல இருக்கு..."

"எதை வச்சு சொல்றே?"

"பாக்கெட்ல 'நன்றி மீண்டும் தருக'ன்னு எழுதி ஸ்லிப் வச்சிட்டுல்ல போயிருக்கான்"

- மணவை பாலு

"யாருங்க இவர்?"

"மனிதவள மேம்பாட்டுத் துறையின் புதிய அமைச்சர், அரசி!"

- உ. ராஜாஜி







# PCO STD ISD

# நமீதா டாப்! மனீஷா ஃப்ளாப்!

## PCO

'என் ரஸ்கக் கன் மதிகலே, நாமே மன்ரம் ஆர்பிச்ருக்கோம். நாமே நல்து பன்னனும். என் ரஸ்கனுங்கோ நல்வனுங்கோ' - இது யார் விட்ட ஸ்டேட்மெண்ட்னு புரியுதா? நமீதா. சமீபத்தில அம்மணி பேர்ல, அகில இந்திய அளவில் ரசிகர் மன்றம் ஆரம்பிச்சிருக்காங்கோ. இப்போ ஆயிரத்து சொச்ச ரசிக உறுப்பினர்கள் இருக்காங்களாம். சொற்ப மாதங்களில் அதைப் பத்தாயிரம் ஆக்குறதுதான் அம்மணியோட குறிக்கோளாம். 'நமீதா மன்றம் ஆரம்பிச்சுட்டாங்கோ. செம ரெஸ்பான்ஸ். அது கட்சியா மாறிடும். அடுத்த தேர்தல்ல நமீதா ஆதரவு கேட்டு மத்த கட்சிகள்ல ஏங்குவாங்க'ன்னு ஒரு குரூப் செய்தி பரப்புனாங்க. என்ன சிரிக்கீங்களா! இந்தத் திருநாட்டிலே இன்னா வேணா நடக்கும்! எதுக்கும் 'புரட்சிப்பூ' நமீதா வாழ்கன்னு கோஷம் போடத் தயாரா இருங்க.

## STD

கோலிவுட்ல ஒரு பார்ட்டி 'புகழ்' ஏத்திக்கிட்டு இருக்க, பாலிவுட்ல ஒரு நாட்டி இருக்கற புகழ, புஸ் ஆக்கிக்கிட்டு இருக்கு. மனீஷா கொய்ராலாதான் அது. நேபாளத்துல காங்கிரஸை நிறுவியவர் மனீஷாவோட தாத்தா பி.பி.கொய்ராலாதான். அங்க ஜனநாயகம் வரணும்னு பாடுபட்டவர். இப்போ மன்னராட்சியை முடிவுகட்ட, நேபாள மக்கள் முழு மூச்சா போராடிக்கிட்டிருக்கிறப்போ, மனீஷா மன்னர் ஞானேந்திராவுக்கு ஆதரவாளரா செயல்படுறாங்க. பாலிவுட்ல கொடி நாட்டுன மனீஷாவை ரோல் மாடலா பார்த்த நேபாள மக்கள், இப்போ 'மனீஷாவை நேபாளத்துக்குள்ள விடமாட்டோம். அவர் நடிச்ச படத்தைத் திரையிடக் கூடாது. மன்னர்கிட்ட பணம் வாங்கிட்டு அவருக்கு ஜால்ரா அடிக்கிறாங்க. மனீஷா ஒழிக'ன்னு சொல்ல ஆரம்பிச்சுட்டாங்க. அரசியல் விமர்சகர்களோட கருத்து என்ன தெரியுமா! 'தன்னோட தவறான அணுகுமுறையால பெரும் அரசியல் வாரிசா வந்திருக்கவேண்டிய மனீஷா, அந்த வாய்ப்பை இழந்துட்டார்'.

## ISD

Desperate Housewives - இது வெளிநாடுகள்ல சூப்பர் ஹிட்டான டீ.வி. ஷோ. இதுல ரொம்ப சூப்பர் ஹிட்டான நடிகை ஈவா லாங்கோரியா. 31 வயசான இவங்களுக்கு ரசிகர்கள் எக்கச்சக்கம். அதுவும் அந்த டீ.வி. ஷோவை மிஸ் பண்ணுனா பெரும் பாவம் செஞ்சுட்டதா எண்ணி வருந்துற அளவுக்கு ரசிகர்கள் இருக்காங்க. ஈவாவோட அடுத்த ப்ளான், எழுத்தாளரா மாறுறதுதான். ஒரு நாவல் எழுதப்போறாங்களாம். அதுவும் அந்தரங்க வாழ்க்கை கலந்த செமி ஆட்டோபயோகிராபியாம். 'ஹைய்யோ'ன்னு ஆச்சரியத்துல பல பேர் இப்பவே காத்திருக்க ஆரம்பிச்சுட்டாங்க. போனவாரம் ஈவா ஒரு கார் விபத்துல இருந்து தப்பிச்சிருக்காங்க. அது ஃப்ளாஷ் நியூஸ்னா பாத்துக்கோங்களேன்.

- முகில்

# அடங்க மறுக்கும் கவிதைகள்!

புதுக் கவிதைகள் இசைக்குள் இசையுமா? 'முடியும்' என்கிறார் இசையமைப்பாளர் இனியவன். கவிப்பேரரசு வைரமுத்துவின் கவிதைகள், 'கவிதையே பாடலாக...' என்று ஒலி - ஒளி குறுந்தகடாக வெளி வந்துள்ளன. பன்னிரண்டு புதுக் கவிதைகளை வைரமுத்து தம் குரலில் படிக்க, அதே பாடல்கள் இனியவனின் இசையில் பிரபல பின்னணிப் பாடகர்களின் குரல் ஒலிக்கின்றன.

'மரங்களைப் பாடுவேன்' என்ற கவிதையில் மரத்தின் பெருமைகளை நாம் மறந்தோம் என்று உணர்த்துகிறார். 'ஏண்டியம்மா குத்த வச்ச', 'ஆத்தோரம் பூத்த மரம்' இரண்டும் பெண் உணர்வுகளைப் பேணுகின்றன. 'ஆயிரந்தான் கவிதை சொன்னேன்', 'ஏலே தொரச்சாமி' இரண்டும் தாயின் பெருமையையும், உள்ளத்தையும் பேசுகின்றன. அதே தாயின் உணர்வுகளை வேறுவிதமாக வெளிப்படுத்தி நம்மை வியக்க வைக்கிறார் 'அழைப்பு' என்ற கவிதையில். தவிர்க்கவே முடியாத கவிதைப் பொருளான காதல் 'உன்னைச் சுற்றி', 'இது போதும்' இரண்டிலும் இடம் பிடித்துள்ளது. 'மதுரை'யின் பெருமை ஒன்றிலும், 'உலக'த்தின் விமர்சனம் இன்னொன்றிலும் வித்தியாசமான கோணங்களில் பேசப்படுகின்றன.

சந்தம் துறந்த புதுக் கவிதைகள் சங்கீதத்திற்குள் அடங்க சத்தியமாக மறுக்கின்றன. பாடல்களுக்கும், (புதுக்) கவிதைகளுக்கும் இடையே ஒரு பெரிய வித்தியாசம் இருக்கிறது. புதுக் கவிதைகளில் கடைசி வரிகளோ, வார்த்தைகளோ பெரும்பாலும் ஒரு சிறுகதையின் முடிவு போல் 'நச்'சென்று இருக்கும். பாடல்களாகப் பாடும்போது, அந்த வார்த்தைகள் இசைக்காக அலைக்கழிக்கப்பட்டு, திரும்பப் பல்லவியில் வந்து அமர்கையில்.... ம்ஹூம்... கவிதையின் அழுத்தம் அடிபடுகிறது.



இரைச்சலான இந்திப் பாடல்களுக்கு இடையே இதமாக வந்துள்ளன அமீர் கான் - காஜோல் நடித்துள்ள 'ஃபனா' படப் பாடல்கள். இசை : ஜதின்-லலித் இரட்டையர். இத்துடன் இந்த இரட்டையர்கள் பிரிகின்றனராம் (அட கடவுளே!). 'சாந்த் ஸிஃபாரிஷ்' ஷானின் குரலில் மயிலிறகால் மனதைத் தடவும் இதத்துடன் என்றால், கடைசியாகச் சற்றுப் புதுமை 'மிக்ஸ்' பண்ணியுள்ள அதே பாடலின் இன்னொரு பதிவும் உறுத்தாமலே ஒலிக்கிறது. 'மேரே ஹாதோன்மே', 'சந்தா சம்கே', 'தேகோநா' ஆகியவை ஜாலியான பாடல்கள் என்றால், தற்போது நிலவும் அமீர்கானின் படங்களின் தனித்துவத்துடன் 'தேஸ் ரங்கீலா' என்ற தேச பக்திப் பாடலும் உண்டு. காஷ்மீரைச் சேர்ந்த கண் பார்வையற்ற ஸூனிக்கும் தில்லியிலிருந்து வரும் இளைஞன் ரேஹனுக்கும் இடையே மலரும் காதல் கதையாம். 'ஃபனா' என்றால் அழிவு என்று அர்த்தம். ஆனால் 'சாந்த் ஸிஃபாரிஷ்' முதல் எல்லாப் பாடல்களுமே மனதில் அழியாமல் நிற்கும்.

**- ஜோதிஸ்வரூபிணி**

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்:** ராசிநாதன் செவ்வாய் சனியுடன் சம்பந்தம் பெற்று 4-ல் சஞ்சாரம் செய்வது ரொம்ப நற்பலனை அளிக்கும். வீடு/மனை வாங்க உகந்த நேரம். வேலையில் நல்ல முன்னேற்றம் கிட்டும். மகப்பேறு பெறும் பாக்கியம் கிட்டும். நண்பர்/உறவினர்கள் மூலம் ஆதாயம் அடைவார்கள். திருமணம் ஆகாத ஆண், பெண்களுக்குத் திருமணம் கைகூடும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். மாணவ-மாணவிகள் படிப்பில் வளர்ச்சி காண்பார்கள். பணக் கஷ்டம் விலகும். சனிக்கிழமைதோறும் சனீஸ்வர பகவானுக்கு அர்ச்சனை செய்துவருதல் நற்பலனை அளிக்கும்.

**ரிஷபம்:** ராசிநாதன் சுக்ரன் ராசியில் சஞ்சாரம் செய்வது பெயர், புகழை உண்டாக்கும். எதிர்ப்புகள் குறையும். உடல்நிலையில் போதிய முன்னேற்றம் கிட்டும். மனத்தில் தைரியமும் உற்சாகமும் பிறக்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். விட்டுக் கொடுத்து அனுசரணையுடன் நடந்துகொள்வது நற்பலனைத் தரும். நெருங்கிய நண்பர்கள் விலகிப் போவார்கள். சுபகாரியம் கைகூடும். உத்தியோகத்தில் மாறுதல் ஏற்படும். வெளியூர்ப் பிரயாணம் வந்து சேரும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வரவும். நற்பலனை அளிக்கும்.

**மிதுனம்:** ராசிநாதன் ராசியில் சூரிய பகவான் சஞ்சாரம் மிகுந்த நற்பலனை அளிக்கும். எண்ணங்கள் யாவும் ஈடேறும். திருமணம் கைகூடும். கணவன் - மனைவி ஒற்றுமையுடன் வாழ்வார்கள். குழந்தைப் பாக்கியம் கிட்டும். நண்பர்களால் ஆதாயம் கிட்டும். வீடு வாசல், தொழில் மாற்றம் ஏற்படும். வேலைப் பளு அதிகரிக்கும். குழந்தைகளால் மகிழ்ச்சி ஏற்படும். வீடு/மனை வாங்க நல்ல காலம். பத்திரிகைகளில் பெயர் வரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். ராகு/கேது வழிபாடு செய்து வரவும்.

**கடகம்:** ராசிநாதன் சந்திரன் ராசிக்கு 2-ல் சஞ்சாரம் செய்வதால் சமுதாயத்தில் நல்ல பெயர், புகழ் வரும். பணக்கஷ்டம் ஏற்படாது. தெய்வபலம், ஆத்மபலம் ஏற்படும். சாதுக்கள் தரிசனம் கிட்டும். மன உளைச்சல் தீரும். உடல்நிலை மேன்மை பெறும். சொத்துக்கள் வாங்க, விற்க நல்ல காலம். நண்பர்/ உறவினர் மூலம் நல்ல செய்தி வரும். தொழில் துறையில் லாபம் பெறுவார்கள். வெளியூர்ப் பிரயாணத்திற்கான வாய்ப்பு வந்து சேரும். சனி/குரு வழிபாடு நற்பலனை அளிக்கும்.



**சிம்மம்:** ராசிநாதன் சூரியன் 11-ல் சஞ்சாரம்

# 2.7.2006 முதல் 8.7.2006 வரை

செய்வது தன வருவாயை அளிக்கும். யாரிடமும் வாதம் வேண்டாம். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. கொடுக்கல் வாங்கல் வழியில் எச்சரிக்கை அவசியம். வண்டி வாகனத்தில் செல்லும் போது கவனம் தேவை. திருமணத் தடை விலகும். குழந்தைகளால் மகிழ்ச்சி கிட்டும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். வேலைப் பளு அதிகரிக்கும். புதிய தொழில் முயற்சியைச் சற்றுத் தள்ளிப் போடவும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்து வருதல் நலம்.

**கன்னி:** ராசிநாதன் புதன் சூரியனுடன் சம்பந்தம் பெற்று 10-ல் சஞ்சாரம். வேலையில் உயர்வு ஏற்படும். புதிய வேலை வாய்ப்புக் கிட்டும். சுபநிகழ்ச்சி உண்டாகும். கணவன்- மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நற்பலனைத் தரும். சுபயோக சுப நிகழ்ச்சிகள் வீட்டில் நடக்கும். நண்பர்/ உறவினர்களால் ஆதாயம் கிட்டும். உடல் ஆரோக்கியம் பாதிக்கப் படாது. செலவுகள் சுபமானதாக இருக்கும். வீடு/வாகனம் வாங்க நல்ல தருணம். வியாபாரத்தில் நல்ல லாபம் காணுவார்கள். ராகு/கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**துலாம்:** ராசிநாதன் சுக்ரன் ராசிக்கு 8-ல் சஞ்சாரம் விபரீத ராஜயோகத்தை அளிக்கும். வழக்கு வெற்றி அளிக்கும். உடல் நிலை பாதிக்கப்படாது. தன விருத்தி ஏற்படும். குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சி ஏற்படும். புதிய வேலைவாய்ப்பு, வேலை மாற்றம், நீண்ட தூரப் பிரயாணம் செல்ல நேரிடும். வியாபாரத்தில் நல்ல லாபம் கிட்டும். திருமணத் தடை விலகும். தடைப்பட்டு வந்த காரியங்கள் உடன் நடக்கும். வேலைப் பளு அதிகரிக்கும். செலவுகள் பயனுள்ளதாக இருக்கும். குழந்தைகளால் மகிழ்ச்சி கிட்டும். வீடு/மனை வாங்க நல்ல தருணம். குரு/சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**விருச்சிகம்:** ராசிநாதன் செவ்வாய் ராசிக்கு 9-ல் சனியுடன் சேர்க்கை பெற்று இருப்பது வெளியூர்ப் பிரயாணத்தை உண்டு பண்ணும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். மனைவி வழியில் ஆடை ஆபரணப் பொருட்கள் சேரும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். பணக்கஷ்டம் விலகும். நீண்டதூரப் பிரயாணம் செல்ல நேரிடும். சுபச் செலவுகள் தேடி வரும். குழந்தைகளைப் பற்றிய மனக்குழப்பம் நீங்கும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். பத்திரிகைகளில் பெயர் வரும். ராகு/கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**தனுசு:** ராசிநாதன் குரு ராசிக்கு 11-ல் சஞ்சாரம். பூமி மூலமோ, தொழில் மூலமோ ஆதாயம் கிட்டும். திருமணம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சிலருக்குத் தொழில் ஸ்தானத்தில் இடமாற்றம் ஏற்படும். பணக் கஷ்டம் இருக்காது. வழக்கு, வியாபாரம் வெற்றி அளிக்கும். வேலைப் பளு அதிகரிக்கும். குழந்தைகள் மூலம் நற்பலன் கிட்டும். சுய கௌரவம் மேலோங்கும். புதிய வீடு, மனை வாங்க நல்ல தருணம். ராகு/கேது/சனி

• படம்: ஸ்ரீஹரி

## தஞ்சை பரத்வாஜ்

# பரத்வாஜ்...

**என் மகனின் வேலை வாய்ப்பு, திருமணம் பற்றிக் கூறவும்.**

**- ராதா, சென்னை**

உங்கள் மகனுக்கு 2007-ல் திருமணம் நடக்கும். வெளிநாட்டு வேலை நற்பலனைத் தரும். முயற்சி செய்யவும்.

**எனது மகனின் திருமணம், எதிர்காலம் பற்றிக் கூறவும்...**

**- டி.கே. ஜெயகோபால், சேலம்**

உங்கள் பையனுக்கு 33வயது நடைபெறுகிறது. புதன்தசை நடைபெறுகிறது. 2007-ல் திருமணம் முடியும். சொந்தத்தில் அமையாது. படித்த, பண்புள்ள மனைவி அமைவாள். 33-வயதுக்குப் பிறகு எதிர்காலம் நன்றாக இருக்கும்.

**திருமணத்துக்கு மறுத்து வரும் என் மகனுக்குத் திருமணம் நடக்குமா?**

**- சி. பாஸ்கரன், சென்னை - 20**

உங்கள் பையனுக்கு 2006 அக்டோபருக்குப் பிறகு திருமணக் காலம் வருகிறது. படித்த, பண்புள்ள, உடன்பிறப்பு இருவர் உள்ள இடத்தில் பெண் அமையும். சர்ப்பதோஷம் உள்ள பெண்ணாகச் சேர்க்கவும்.

**என் மகனுக்கு மறுமணம் நடக்குமா? நிரந்தரமான வேலை எப்பொழுது கிடைக்கும்?**

**- ஆர். சீனிவாசன், சென்னை - 91**

உங்கள் பையனுக்கு செவ்வாய் தசை நடைபெற்று வருகிறது. செவ்வாய் தசையில் திருமணம் நடந்தால் மறுமணம் நடக்கும் என்பது விதி. 2007-ல் மறு திருமணம் நடக்கும். வெளிநாட்டு வேலை நற்பலனைத் தரும். முயற்சி செய்யவும்.

# ...பதில்கள்

வழிபாடு நற்பலனைத் தரும்.

**மகரம்:** ராசிநாதன் சனிபகவான் ராசிக்கு 7-ல் செவ்வாய் பகவானுடன் சஞ்சாரம் செய்வது மதிப்பும் மரியாதையும் அதிகரிக்கும். முயற்சி செய்யும் காரியம் பலிதமாகும். சொத்துகள் வாங்க நல்ல தருணம். தெய்வபலம் அதிகம் இருக்கும். குழந்தைகள் பற்றிய மனக் கவலை தீரும். சுப நிகழ்ச்சிகள் கைகூடும். நண்பர்/ உறவினர்களால் ஆதாயம் கிட்டும். மனக்கிலேசம் போகும். செலவுகள் பயனுள்ளதாக இருக்கும். உத்தியோகத்தில் பெயர், புகழ், தனம் கிட்டும். வியாபாரத்தில் கணிசமான வருவாயை அளிக்கும். சத்ரு தொல்லை விலகும். குழந்தைப் பாக்கியம் ஏற்படும். சனி/குரு வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**கும்பம்:** ராசிநாதன் சனி பகவான் செவ்வாயுடன் சேர்க்கை பெற்று ராசிக்கு 6-ல் சஞ்சாரம் செய்வது எதிரிகளை வீழ்த்தும். வேலைப்பளு அதிகரிக்கும். யாருடனும் வாக்குவாதம் செய்ய வேண்டாம். வண்டி வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. வீடு/மனை வாங்க நல்ல காலம். நெருங்கிய உறவினர்கள்/ நண்பர்கள் விலகிச் செல்வார்கள். வெளியூர் மனிதர்களால் நல்ல செய்தி கிடைக்கும். தொலைதூரப் பிரயாணத்திற்கான வாய்ப்பு வந்து சேரும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். திருமணக் காரியம் கைகூடும். ராகு/கேது வழியில் நற்பலனைத் தரும்.

**மீனம்:** ராசிநாதன் குரு ராசிக்கு 8-ல் சஞ்சாரம் விபரீத ராஜயோகத்தை அளிக்கும். உத்தியோகத்தில் மாற்றம் ஏற்படும். வெளிநாட்டு மனிதர்களால் நல்ல தகவல் வரும். திருமணத் தடை விலகும். மன உளைச்சல் தீரும். கணவன்- மனைவிக்குள் அனுசரணை தேவை. சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். புதிய வீடு வாசல் வாங்க நல்ல தருணம். நண்பர்/ உறவினர்களால் ஆதாயம் கிட்டும். வாக்குவாதம் வேண்டாம். வியாபாரத்தில் நல்ல லாபம் காணும். ஏற்றுமதித் தொழில் செய்பவருக்கு அதிகம் ஆதாயம் கிடைக்கும். ராகு/கேது/குரு வழிபடுதல் நற்பலனைத் தரும்.

# புன்னகைப் புழு!

சந்தானம் இறந்து விட்டானாம்!

"என்னங்க, உங்க உயிர் நண்பர் போயாச்சே. என்ன செய்யப் போறீங்க?" கமலா இருபொருளில் கேட்டபடியே என்னைக் கூர்ந்துப் பார்த்தாள்.

"நீதான் சொல்லணும்'' என் கண்களில் படர்ந்த ஆசையை அவளும், அவள் முகத்தில் தெரிந்த ஆசையை நானும் படித்தோம்.

"சந்தானம் எப்போ இறந்தானாம்?"

"அவர் வீடு இருக்கிற தெரு முனையில் மயங்கி விழுந்திருக்கார். வீட்டுக்குக் கொண்டுபோய்ப் படுக்க வச்சிட்டு டாக்டரைக் கூப்பிட்டு இருக்காங்க. டாக்டர் வருவதற்குள்ளேயே உயிர் பிரிந்து விட்டதாம்."

"அப்போ தெருவில் விழுந்தவனுக்கு நினைவு திரும்பவேயில்லை. மயங்கியபின் பேச்சும் இல்லை. அப்படித்தானே?'' என்னை அறியாமலேயே என் குரலில் மகிழ்ச்சி கலந்தது.

கமலாவும் முகம் கொள்ளா சிரிப்புடன் "ஆமாங்க. உங்க சிநேகிதர் எதுவுமே பேசவே இல்லையாம்" என்றாள்.

"இனி என்ன செய்யலாம், சொல்லு கமலா.''

''உங்க சிநேகிதர் தன் மகள் கல்யாணத்துக்காக இரண்டு லட்ச ரூபாய்க்கு ஃபிளாட்டை வித்திருக்கார்."

"பணத்தை வாங்கிக்கொண்டு வரும் வழியில் என்னைப் பார்த்தான். நான் கூப்பிடவும், என்னோடு நம் வீட்டுக்கு வந்தான். காபி, டிபன் சாப்பிட்டான்.

"பணத்தை நம்மிடம் கொடுத்துவிட்டு யாரையோ பார்த்துவிட்டு வருவதாகவும், வந்து பணத்தை வாங்கிக்கிறேன்னும் சொல்லிட்டுப் போனார். இதெல்லாம் யாருக்குமே தெரியாது. போன மனுஷர் தன் வீட்டுக்கு எதற்கோ போயிருக்கார்."

"மயங்கி விழுந்தான். நினைவு திரும்பாமலே போய்ச் சேர்ந்துவிட்டான். பாவம்... ம்... அப்புறம்?"

"நமக்கும் கல்யாண வயசில் பெண் இருக்கா. உதவி செய்ய ஆள் இல்லை. நீங்களும் யாரிடமும் கடன் கேட்டுப் பணம் புரட்டிக் கல்யாணம் பண்ணப் போறதில்லை. கடவுளா பார்த்து உங்க சினேகிதர் வடிவத்தில் பணம் கொடுத்து உதவியிருக்கார்."

என் முடிவும் அதுதான். இருந்தாலும் மனசாட்சி திமிறிக்கொண்டு இருந்தது. ''கமலா, இது பாவமில்லையா? நம்பிக்கைத் துரோகம் இல்லையா?''

"பேசாம இருங்க. சந்தானம் மனைவி மங்களம் திறமையானவள். அவளுக்குக் கூடப் பிறந்தவங்க எல்லாம் வசதியானவங்க. அவங்க எல்லாம் செய்வாங்க. பையனும் இருக்கான். நமக்கு ரெண்டும் பெண்கள். மூத்தவ கல்யாணத்துக்கு இந்தப் பணம். அடுத்தவ கல்யாணத்துக்கு வீட்டை வித்து சமாளிச்சுக்கலாம்.''

"இருந்தாலும் கமலா...''

''நீங்க வாயை மூடிட்டு இருந்தா போதும். மத்ததையெல்லாம் நான் பார்த்துக்கறேன். உங்க சிநேகிதருக்கு அந்தக் காலத்தில் ஃபிளாட்டைக் குறைஞ்ச விலைக்கு வாங்கிக் கொடுத்ததே நீங்கதானே? மாசத்தில் பாதிநாள் நம் வீட்டில் சாப்பிட்டிருக்கார். எவ்வளவு உதவி செஞ்சிருக்கோம்?''

என் மனசாட்சியின் கழுத்தை நெறித்தேன்.

இரண்டு பேரும் சாவு வீட்டுக்குப் போனோம். என்னைக் கண்டவுடனேயே சந்தானத்தின் மனைவி கதறினாள். "எங்களையெல்லாம் நடுத்தெருவில் நிறுத்திட்டுப் போயிட்டாரே அண்ணா. மகளுக்கு ஒரு வழி செய்யாமப் போயிட்டாரே...'' சுவரில் முட்டி அழுதாள்.

''பெரியப்பா, அக்கா கல்யாணத்தை முடிச்சுட்டு இவர் போயிருக்கணும். இனி நான் என்ன செய்வேன்?''

சந்தானத்தின் மகன் என் கைகளைப்

பற்றிக்கொண்டு அழுதான். நிராதரவாய் நின்ற அவன் மகளைப் பார்க்கவும் எனக்கு அழுகை பொங்கியது.

''உயிர் நண்பராச்சே. உடம்பு துடிக்காதா, பாவம்!'' இன்னொருவர் என்னை அணைத்துக்கொண்டார். என் உடல் நடுங்கியது. நான் முன்னின்று எல்லாக் காரியங்களையும் கவனித்தேன். சந்தானம் சிதையில் எரிந்தான். என்னை எரித்தான்.

மறுவாரம் சந்தானத்தின் பையன் வந்தான். "பெரியப்பா... அப்பா ஃபிளாட்டை வித்திருக்கார்'' என்று என் முகத்தில் அதிர்ச்சியைத் தேடினான். தாமதமாய் அதிர்ந்து ''அப்படியா...'' என்றேன்.

''அந்தப் பணத்தை என்ன செய்தார் என்றே தெரியவில்லை, பெரியப்பா. அக்கா கல்யாணத்துக்கு என்ன செய்வேன்...'' என்று அழுதான்.



மௌனமாய் அவன் தோளைத் தட்டினேன். என் மகள் திருமணத்துக்குப் பத்திரிகை கொடுத்தேன். மங்களம் தன் மகனிடம் மோதிரம் ஒன்றைப் பரிசாகக் கொடுத்து அனுப்பினாள். "உங்க சினேகிதர் இருந்தால் ரொம்ப சந்தோஷப் பட்டிருப்பார்'' என்றாள். அவன் மகளுக்கு இரண்டாம் தாரம் திருமணம். நாங்கள் போய்த் தாராளமாய் செய்தோம்.

"பாருங்க பெரியப்பா. நீங்க எவ்வளவு சிக்கனமா இருந்து பணம் சேர்த்து மகளை நல்ல இடத்தில் கொடுத்திருக்கிங்க. எங்க அப்பா கொஞ்சம்கூட பொறுப்பில்லாம ஃபிளாட் வித்த பணத்தைக்கூட வாரியிறைச்சிருக்கார்'' பொருமினான் சந்தானத்தின் மகன்.

மங்களம் மௌனமாய் இருந்தாள். "இவன் இப்படி பொறுப்பில்லாம இருப்பான்னு நான்கூட நினைக்கலைம்மா. பாவி, இப்படிப் பாதியில் போவான்னு யாருக்குத் தெரியும். மயங்கி விழுந்தவன் திரும்பப் பேசாமலேயே போய் விட்டானே...'' என்றேன்.

''இல்லை அண்ணா. வீட்டுக்குக் கொண்டு வந்ததும் பேசினார். உங்க வீட்டுக்கு வந்ததையும், மத்த விவரங்களையும் சொன்னார்.'' மங்களம் புன்னகை மாறாமல் சொன்னாள். பேச்சிழந்தேன். புழுவாய் உணர்ந்தேன். ○

**அருள்மொழிவர்மன்**

# “தி.மு.க.விடம் கெஞ்



தேர்தல் களேபரத்தின்போது நிய மிக்கப்பட்டதால், இளைஞர் காங்கிரஸ் தலைவரான மயூரா ஜெயக்குமார் பற்றிப் பரவலாகத் தெரியவில்லை. தேர்தல் முடிந்த கையோடு ஆளுயர போஸ்டர், அட்டகாசமான பொதுக்கூட்டம் என்று அசத்துகிறார் மயூரா. சீனியர்கள் பதில் சொல்லத் தயங்கும் கேள்விகளுக்குப் ‘படார்’ பதில்களைச் சொல்கிறார்.

**கார்த்தி சிதம்பரம் போன்ற பலமான தலைகள் மோதியும் இளைஞர் காங்கிரஸ் தலைவர் பதவியைப் பெற்றுவிட்டீர்களே!**

“மாவட்ட அளவில் பல்வேறு பதவிகளில் பணியாற்றியிருக்கிறேன். எனவே தொண்டர்களின் பிரச்னை, கட்சியின் பலம், பலவீனம் எல்லாவற்றையும் அறிந்து வைத்திருக்கிறேன். தலைவர் மூப்பனாரின் அடிச்சுவட்டில் அரசியல் பயின்றவன் நான்.”

**உங்கள் சீனியர்களே கோஷ்டி மோதலில் தலையை உருட்டிக்கொள்ளும் போது இளைஞர் காங்கிரஸ் என்ன சாதித்துவிட முடியும்?**

“மூத்த தலைவர்களைப் பற்றி நான் எதுவும் பேசக்கூடாது. ஆனால் எனக்காக மேலிடத்தில் தீவிரமாக சிபாரிசு செய்த தலைவர் வாசன் அவர்கள் ‘நீங்க நம்மாளுங்களுக்கு மட்டும் தலைவரல்ல; எல்லோருக்கும் தலைவர். எல்லோரையும், அரவணைத்து, அனுசரித்துப் போக வேண்டும்’ என்று சொல்லியிருக்கிறார். அவர் ஆலோசனைப்படி நடந்து கொள்வேன். நிர்வாக ரீதியாக முறையாகச் செயல்பட்டால் இளைஞர் காங்கிரஸை ஒரு துடிப்புள்ள அமைப்பாக மாற்ற முடியும்.”

**பொதுவாகவே இளைஞர் காங்கிரஸ் அமைப்பை மூத்த தலைவர்கள் ‘இளிச்சவாயர்கள்’ என்ற அளவிலேயே பார்ப்பதாகக் குற்றச்சாட்டு இருக்கிறதே...**

இளிச்சவாயர் என்று பார்க்கவில்லை ஆனால் நாங்கள் அமுக்கப்படுகிறோம் இந்த அமுக்கலிலிருந்து மீறி எழுந்து பளிச்சிட வேண்டுமானால், திறமையுடனும் புத்திசாலித்தனத்துடனும் செயல்பட வேண்டும். ‘எங்களை ஏன் அமுக்குகிறீர்கள்?’ என்று கேட்டால் ‘நாங்கள் யூத் காங்கிரஸில் இருந்தபோது எங்களையும் இப்படித்தான் மேலுள்ளவர்கள் அமுத்தினார்கள். அதிலிருந்து நாங்கள் மீண்டு வரவில்லையா? அதுபோல நீங்களும் வர வேண்டும் என்று சொல்கிறார்கள் சீனியர்கள்.”

**இளைஞர் காங்கிரஸுக்கு என்ன வேலை?**

“கட்சி மேலிடம் மற்றும் மூத்தவர்கள் சொல்லும் கட்சி வேலைகளை, வளர்ச்சிப் பணிகளைக் கவனிப்பது, போராட்டங்களை நடத்திக் காட்டுவதுதான் யூத் காங்கிரஸ். தெரிந்தோ தெரியாமலோ நமது தினசரி வாழ்க்கை, அரசியல்வாதிகளையொட்டி அமைந்துவிட்டது. இந்த நிலையில், படித்த இளைஞர்கள் அரசியலுக்கு வந்தால்தான், தீய சக்திகள் இடத்தைக் காலி செய்யும். நாற்பது வருட காலம் கட்சி ஆட்சியில் இல்லை. இருந்தும், மாவட்ட ஆட்சியாளர் அலுவலகம், காவல்துறை, உள்ளாட்சி போன்ற அமைப்புகளில், பொது மக்களின்



“இளைஞர் காங்கிரஸைச் சேர்ந்தவர்கள் இளிச்சவாயர்கள் அல்லர்!”

# வேண்டியதில்லை!”

## - காங்கிரஸ் தடாலடி

பிரச்னைகளை எடுத்துச் சென்று தீர்வு காண காங்கிரசால் முடிகிறது.”

**இந்த சட்டமன்றத் தேர்தலுக்குப் பிறகு ஆட்சியிலும் பங்கு பெற்றிருந்தால் மக்களுக்கு காங்கிரஸ் இன்னமும் சிறப்பாகப் பணியாற்ற வாய்ப்பு கிடைத்திருக்குமே!**

“நியாயம்தான். ஆனால் ஆட்சியில் பங்கு என்பதை தி.மு.க. எங்களின் கெஞ்சலாக எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. பங்கு கேட்பது எங்கள் வலிமை. ஆட்சியில் பங்கு வேண்டும் என்று கேட்பதில் எந்தத் தவறும் கிடையாது. ஆட்சியில் பங்கு கிடைத்திருந்தால், கூட்டணிக் கட்சியாகத் தொடர்ந்திருப்போம். இப்போது சட்ட மன்றத்தில் எதிர்க்கட்சி வரிசையில் உட்கார வைக்கப்பட்டதால் நட்புக் கட்சியாகத் தொடர்கிறோம்.”

**வரும் உள்ளாட்சித் தேர்தலில் தி.மு.க.வுடன் கூட்டு தொடருமா?**

“டெல்லியில் இருக்கும் அரசுடன் ஒத்த கருத்துடைய மாநில அரசு இப்போது இருப்பதால் மாநிலத்துக்கு நிறைய நன்மைகள் கிடைக்க வாய்ப்புண்டு. அதேபோல மாநிலத்தில் ஆளும் அரசுடன் ஒத்த கருத்துடையவர்கள் உள்ளாட்சிகளில் வெற்றி பெற்றால், அந்தந்த ஊருக்கு நன்மைகள் கூடுதலாகக் கிடைக்கும். மேலும் இரண்டு தேர்தல்களில் தி.மு.க.வுடன் இணைந்து பணியாற்றியிருக்கிறோம்.

எங்களுக்கிடையே மதச்சார்பின்மை, ஊழல் ஒழிப்பு ஆகிய பொதுவான அம்சங்கள் உண்டு. எனவே, சட்டமன்றத் தேர்தலையொட்டி அமைந்த கூட்டணி, உள்ளாட்சியிலும் தொடரும் என்பது என் நம்பிக்கை. இது குறித்து, மேலிடம் தக்க நேரத்தில் தக்க முடிவெடுக்கும்.”

- ப்ரியன்

படம் : ராஜன்

# ஜன்னல் சந்தேகங்கள்!

## வளம் தரும் வாஸ்து-12



**காஞ்சி கிருஷ்ணா**



**வீ**ட்டுக்கு மிக அத்தியாவசியமான விஷயம் குளியலறை மற்றும் கழிவறை. இவற்றை எப்படி சுகாதார ரீதியாக மிகுந்த பொறுப்புடன் பராமரிக்க வேண்டுமோ அப்படி வாஸ்து சாஸ்திர ரீதியாகவும் மிகவும் கவனத்துடன் இருக்க வேண்டும். பல வீடுகளில் குளியலறையும் கழிவறையும் இணைந்துதான் இருக்கின்றன. அப்படிப்பட்ட அறை கிழக்கு / மேற்கு திசையில் அமைவது வாஸ்து பிரகாரம் மிகவும் நல்லது. வாட்டம் சரியாக இல்லை என்பதற்காகவோ, அல்லது இடப்பற்றாக்குறை காரணமாகவோ வடக்கு/கிழக்கு திசையில் குளியலறை கட்டுவது தோஷத்தை உருவாக்கும். அந்த அறையில் வெந்நீர் போட வைத்திருக்கும் ஹீட்டரைத் தென்கிழக்காக அமைப்பது நல்லது.

அடுத்து கழிவறை. தெற்கு/மேற்கு திசையில் கழிவறையை அமைத்துக்கொள்ள வேண்டும். ஆனால் கண்டிப்பாக எந்த மூலையிலும் இருக்கக்கூடாது. இதில் கவனமாக இருக்க வேண்டும். இந்தக் கழிவறையில் கிழக்கு/மேற்காக உட்காரும்படி அந்த பேசின் இல்லாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும். பொதுவாக குளியலறை/கழிவறையில் வெவ்வேறு வண்ணங்களை அடிக்காமல், வெள்ளை நிறத்தை மட்டும் பயன்படுத்துவது சிறப்பைத் தரும்.

அடுத்து ஜன்னல். இதில் பலருக்குப் பல சந்தேகங்கள் வருகின்றன.

நம் வீட்டில் இருக்கும் ஜன்னல்களின் எண்ணிக்கை இரட்டைப் படையில் இருப்பது அதிர்ஷ்டத்தை அளிக்கிறது. அந்த ஜன்னல்களை வடக்கு/கிழக்குச் சுவர்களில் அதிக எண்ணிக்கையில் வைத்தால் தவறில்லை. ஆனால் தெற்கு/ மேற்குச் சுவர்களில் கண்டிப்பாக குறைந்த எண்ணிக்கையில்தான் ஜன்னல்கள் அமைக்கப்பட வேண்டும். அதிலும் இந்த ஜன்னல்கள் அளவில் சிறியதாக இருக்குமாறு பார்த்துக்கொள்வது நல்லது. பல வீடுகளில் ஜன்னல் கதவுகளை அழகுக்காக வைக்கிறோம் என்ற பெயரில் நான்கு

## கேளுங்கள் சொல்கிறே

**எ**ன் கணவர் ஓர் அரசியல்வாதி. எங்கள் வீட்டில் சுவாமி படங்களை விட பெரிது பெரிதாக அரசியல் தலைவர்களின் படங்கள்தான் இருக்கின்றன. இப்படி இருப்பது தோஷம் என்கிறார்களே?

- தேன்மொழி,
திருவீழிமிழலை



பது சிறப்பைத் தருகிறது.

வீட்டில் இருக்கும் பொருட்களை வைத்துக் கொள்வதற்கு நாம் அதிகம் பயன்படுத்துவது அலமாரிகளைத்தான். அவற்றுக்கும்கூட வாஸ்து உண்டு. அதாவது, தெற்கு/மேற்குச் சுவரில் பெரியதாகவும், கிழக்கு/வடக்குச் சுவரில் சிறியதாகவும் அலமாரிகளை அமைத்துப் பயன்படுத்துவது நல்லது.

தேவையற்ற பொருட்களைப் போட்டு வைப்பதற்காக பயன்படுத்தும் லாப்டுகளையும் எளிதில் விட்டுவிட முடியாது. இவற்றைக் கண்டிப்பாக தெற்கு/மேற்குச் சுவரில்தான் அமைக்க வேண்டும். தேவைப்பட்டால் மட்டுமே கிழக்கு/வடக்கு திசையில் சிறியதாக

அப்படி இருப்பதில் தவறில்லை. ஆனால் அந்தப் படங்களை பூஜை அறைக்குள் வரவிடாமல் வரவேற்பறையிலோ, அல்லது அலுவலக அறையிலோ வைத்துக் கொள்வது நல்லது.

**எங்கள் வீட்டின் தென்மேற்கே உள்ள படுக்கை அறைக்கு இரண்டு படிகள் இறங்கித்தான் செல்ல வேண்டும். இது வாஸ்துப்படி தவறா?**

**- சந்திசேகரன், நெய்வேலி**

அப்படி இருப்பது குறைபாடுதான். அதற்குப் பரிகாரமாக, படியை எடுத்து விட்டு அந்த உயரத்துக்குத் தரையை உயர்த்தி விடுங்கள். ஒரு வேளை, அதற்கு வாய்ப்பு இல்லாத பட்சத்தில் ஹாலில் இருந்து அந்த அறைக்குச் செல்லும் வழியை அடைத்துவிட்டு, வெளியில் இருந்து அந்த அறைக்குச் செல்ல வழி ஏற்படுத்திக்கொள்வது நல்லது.

கதவுகள், ஆறு கதவுகள் என்று வைத்து விடுகிறார்கள். இது மிகவும் தவறானது. ஒரு ஜன்னலுக்கு இரண்டு கதவுகள் மட்டுமே இருக்க வேண்டும்.

செவ்வக வடிவம்தான் வாஸ்து சாஸ்திரப்படி ஜன்னல்களுக்கு உகந்தது. அந்த ஜன்னலின் குறுக்கே வைக்கப்படும் கம்பிகளின் எண்ணிக்கை கண்டிப்பாக இரட்டைப் படையில்தான் அமைய வேண்டும். எதிரெதிரே இரண்டு ஜன்னல்கள் வைப்

லாப்டுகளைக் கட்டிக் கொள்ளலாம்.

நிலவறை கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அண்டர்கிரவுண்ட் என்றால் டக்கென்று புரிந்துவிடும். முன்பெல்லாம் ரகசியமான விஷயங்களுக்கு மட்டுமே பயன்பட்டு வந்த இந்தப் பகுதி, இப்போது வியாபாரத்திற்காகவே அதிகம் பயன்படுத்தப்படுகின்றது. புரியவில்லையா... அடுத்த வாரம் விரிவாகப் பேசலாம்.

**(வாஸ்து வளரும்)**



**அ**ன்று ஞாயிற்றுக் கிழமை... மணி காலை ஏழு... அந்தப் பகுதியின் தலைவர் இப்ராகிம் அபுபக்கர் இன்னும் வரவில்லை. கோழிகளும் சேவல்களும் நடத்தும் அனல்பறக்கும் கூட்டம் ஆரம்பித்துவிட்டது. பிரச்னையின் தலைப்பு: தமிழ்நாட்டில் சிக்கன் குன்யா.

சினிமா புகழ் 'சேவல் சிங்காரத்தை' முதலில் பேசும்படி எல்லோரும் அழைப்பு விடுத்தனர்.

சிங்காரம் ரெண்டு படத்தில் நடித்திருக்கிறது. சமீபத்தில் வந்த தமிழ் சினிமாவில் இந்தியிலிருந்து வந்த நடிகை ஜானியா பவர்லால், சிங்காரத்தை நெஞ்சில் அணைத்தபடி ஒரு பாட்டுப் பாடியிருந்தாள். இன்னொரு பக்திப் படத்தில் உம்மாச்சிக் கையிலிருந்து புறப்படும் 'சேவல் சிங்காரம்', வேகமாகப் பறந்து சென்று உண்டியல் திருடும் வில்லனைப் புரட்டிப் போடும்... அவன் கண்களைக் குத்தும்... இருபது நிமிட சண்டைக்குப் பிறகு உண்டியல் திருடன் செத்தே போய்விடுவான். ஒரு சேவலால் மனுஷனைச் சாகடிக்க முடியுமா என்று யோசிக்க நேரமில்லாததால் ஜனங்கள் எல்லாம் கைட்டினார்கள். சினிமாவில் நடித்துவிட்டதால் அடுத்து அரசியலிலும் நுழைய சிங்காரத்துக்கு ஆசை வந்துவிட்டது போலிருக்கிறது...

புள்ளிவிவரங்களோடு தன் உரையைத் தொடங்கியது... "நான்கு மாதங்களுக்கு முன்னாடி பறவைக் காய்ச்சல் பரவியது. பறவை என்றால் என்ன...? மயில், கொக்கு, காக்கா, குருவி, குயில், கோழி எல்லாம்தானே பறவைகள். ஆனால், நம் இனத்துக்கு மட்டும் அநீதி நடந்ததை நீங்கள் அறிந்திருப்பீர்கள். பறவைக் காய்ச்சல் வந்தபோது கோழியை மட்டும்தான் குறி வைத்துக் கொன்றுக் குவித்தார்கள். நம் தாய்நாடான கோழிக்கோட்டில் மட்டுமே 17,000 கோழிகளைக் குழி தோண்டிப் புதைத்தார்கள். இப்போது வந்திருக்கும் புது வியாதிக்கும் சிக்கன் குன்யா என்று பெயர் வைத்திருக்கிறார்கள். ஏன் கழுகு குன்யா, கருடன் குன்யா என்று வைப்பதுதானே... கொக்கரக்கோ என்று உரக்கக் கத்தி எதிர்ப்பைத் தெரிவிக்கும்படி உங்கள் அனைவரையும் கேட்டுக்கொள்கிறேன்" பலத்த கைத்தட்டலுடன் பேச்சை முடித்தது சிங்காரம்.

மகளிர் அணி கோழியம்மா ஒரு 'டவுட்'டைக் கிளப்பினாள். "அந்த வியாதிக்குப் பேரு சிக்கன் கிடையாது... 'சிக்குன் குன்யா'வாம். பேப்பர்ல போட்டிருக்கான்..."

"போடட்டுமே... எவன் அதை அப்படிச் சொல்றான்? எல்லாம் சிக்கன் குன்யான்னுதான் சொல்றான். ஏ.கே. 47-ன்னு துப்பாக்கிக்கும் பேர் வைக்கிறானுங்க... சிக்கன் 65-ன்னு நமக்கும் பேர் வைக்கிறானுங்க. மடையனுங்க!" - கோழிஸ்ரீ குதித்தாள்.

எந்தவிதப் பிரசவ வலியும் இல்லாமல் ரெண்டு முட்டையைப்



பிரசவித்துவிட்டு கொஞ்சம் லேட்டாக மீட்டிங்குக்கு வந்த சிக்கன்தேவி, தன ஆவேசத்தைக் கொட்டினாள்... "கிச்சன் என்று சமையலறையை அழைக்கிறார்

# கொக்கரக்கோ...

கள் மனிதர்கள். இதில்கூட ஏதோ சூழ்ச்சி இருக்கிறது. சிக்கனைக் காலி பண்ணவே கிச்சனுக்குப் போகிறார்கள் மனிதர்கள். நம்மை மட்டுமில்லாமல் நம் வாரிசுகளையும் சின்ன வயதிலிருந்தே கிண்டல் பண்ணுகிறார்கள். பரீட்சையில் யாராவது ஃபெயில் ஆயிட்டா 'கோழி முட்டை' போடறாங்க. நம்மளைக் கண்டாலே மனிதர்களுக்குப் பிடிக்கலே."

"அதேமாதிரி அந்தப் பழமொழிகூட எனக்குப் பிடிக்கலே... பொட்டைக் கோழி கூவி பொழுது விடியுமா'ன்னு கேக்கறாங்க. அநியாயமா இருக்கே... இது பெண் கோழிகளை அவமானப்படுத்துகிறது" என்றது கோழிஸ்ரீ.

"'கோழி கூவுது'ன்னு ஒரு சினிமா எடுத்தாங்க. கோழிகளோட பிரச்னைகளைப் பத்தி சொல்லியிருப்பாங்கன்னு பார்த்தா ஏமாற்றம். கோழி கூவற நேரத்துல கும்மாளமடிக்கிற காதல் ஜோடி கதை அது" என்று டென்ஷன் ஆனாள் கோழியம்மா.

"சரி, விஷயத்துக்கு வருவோம். சிக்கன் குன்யாவை அப்படியே விட்டுட முடியாது. நாம கண்டுக்கலேன்னா அடுத்த வியாதிக்கும் நம்ம பேரையே வெச்சுடுவாங்க. அது மட்டுமில்லாம ஏற்கெனவே இருக்கும் வியாதிக்கும் - சிக்கன் ஹார்ட் அட்டாக், சிக்கன் கேன்சர், சிக்கன் எய்ட்ஸ் என்று நம் நாமகரணத்தைச் சூட்டவும் வாய்ப்பிருக்கிறது. மனுஷங்களுக்கு நம்மை ஏன் பிடிக்க மாட்டேங்குது... புரியலையே!" - கேவிக் கேவி அழுதது சிங்காரம்.

நிஜமாகச் சொல்லப் போனால் கோழிகள் போட்டது தப்புக்கணக்கு! மனிதர்களுக்குக் கோழிகள் மீது பாசம் உண்டு. அது கொஞ்ச நேரத்திலேயே தெரிந்தது....



அந்த இடத்துக்குச் சொந்தக்காரரான கடைக்காரர் இப்ராகிம் அபுபக்கர் வந்தார். எல்லாக் கோழிகளின் தலைகளையும் திருகிக் கபால மோட்சம் தந்தார்... எல்லா மனிதர்களும் ஆசை ஆசையாக வந்து காசு கொடுத்து வாங்கிக்கொண்டு போனார்கள். மனிதர்களுக்குக் கோழிகளைப் பிடித்திருக்கிறது!

**- வாசுதேவ்**





# குறையொன்றுமில்லை

மட்டபல்லி க்ஷேத்திரம் எங்கே இருக்கிறது என்றால், வேதாத்ரிக்கும் வாடபல்லிக்கும் நடுவிலே இருக்கிறது. சாஸ்திர ரீதியாகப் பார்த்தோமானால், ஞானம் - பக்தி - வைராக்கியம் என்று சொல்லுவார்கள்.

இதிலே பக்தி என்பது சித்தித்து விட்டதானால், முன்னே இருக்கிற ஞானத்தையும் சம்பாதிக்க முடியும்; அடுத்து இருக்கிற வைராக்கியமும் கிடைக்கும். பக்தி இல்லையென்றால் வைராக்கியம் சித்திக்காது.

ஆகவே, மட்டபல்லியிலே இருக்கிற எம்பெருமானுடைய அனுக்கிரஹம் நமக்குக் கிடைத்ததானால், வேதாத்ரி நரசிம்ஹனின் அனுக்கிரஹம் கிடைக்கும்; இந்தப் பக்கத்தில் இருக்கிற திபாலய நரஸிம்ஹனின் அனுக்கிரஹமும் நமக்குப் பரிபூரணமாகக் கிடைக்கும்.

அந்த கிருஷ்ணா நதி தீரத்திலே பஞ்ச நரசிம்ஹ க்ஷேத்திரங்கள் உள்ளன. அதிலே இந்த மூன்றும் அடங்கும்.

மங்களகிரி க்ஷேத்திரம் எல்லாவற்றுக்கும் பிரதானமாக இருக்கிறது. மங்களகிரியை அடுத்து வேதாத்ரி; அதற்கடுத்து வாடபல்லி. கிருஷ்ணா நதி உத்தரவாஹினியாக, வடக்குப் பக்கமாக ஓடுகிற இடத்தில், நதிக்கு எதிரே கேதவரம் என்கிற ஊர். இங்கே மலைமேல் எழுந்தருளியிருக்கிறான் எம்பெருமான் நரசிம்ஹன். இந்த கேதவரம் பஞ்ச நரசிம்ஹ க்ஷேத்திரங்களில் ஐந்தாவது.

பஞ்ச நரசிம்ஹ க்ஷேத்திரங்களில் முதல் க்ஷேத்திரம் மங்களகிரி. அந்த மங்களகிரி நரசிம்ஹன்தான் முதன் முதலில் நரசிம்ஹ யக்ஞம் பண்ணும்படி அடியேனை ஆக்ஞாபித்தான். அந்த ஆக்ஞைப்படி *ஆஸ்திக சமாஜத்தில் முதல் யக்ஞம் நடந்தது.

மங்களகிரி க்ஷேத்திரத்து எம்பெருமானும் கிருதயுகத்திலேயிருந்து இருக்கும்படியான எம்பெருமான். அவனுக்குப் பாலையே அந்த யுகத்தில் நைவேத்யம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். திரேதா யுகத்தில் இக்ஷு ஸாரம் (கரும்புச் சாறு). துவாபர யுகத்திலே தேன். இந்த யுகத்திலே கற்கண்டுப் பானகமும் வெல்லப் பானகமும் நிவேதனம்.

அந்த எம்பெருமான் இருக்கிறானே, அவன் பாதியைச் சாப்பிடுவான்; பாதியை நமக்குக் கொடுப்பான். அவனுக்கு அப்படியொரு சக்தி. மலை மேலே ஜலம் கிடையாது. கீழேயிருந்து தான் காவடியிலே எடுத்துக் கொண்டு போகவேண்டும். அங்கே, மேலே, பானகம் தயார் பண்ணக் கூடிய பெரிய கல் இருக்கிறது. அந்தக் கல்லில் வைத்து வெல்லத்தை உடைப்பார்கள்.

அதை எடுத்து ஒரு கங்காளத்திலே கரைத்து, வழிய வழிய பகவானுக்கு நிவேதனம் பண்ணுகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள்...

ஒரு சங்கிலே பானகத்தை எடுத்து, வைகானச ஆகம ரீதியாய், புருஷ சூக்தத்தைச் சொல்லி, அந்த நரசிம்ஹனின் அலைத்த பேழ் வாயிலே சேர்க்கிறார் பட்டர்... அப்படிச் சேர்க்கிற

* 'குறையொன்றுமில்லை' தொடரானது முக்கூர் சுவாமிகள் சென்னை, ஆழ்வார்பேட்டை ஆஸ்திக சமாஜத்தில் ஆற்றிய உரைகளின் தொகுப்பு.

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

எட்டாம் பாகம்

26

பானகம் உள்ளே போய்க் கொண்டே யிருக்கும். கங்காளத்தில் பாதி ஆனவுட னேயே கலகலவென்று சப்தம் வரும். நரசிம்ஹன் பாதி பானகத்தை ஸ்வீகரிப் பான். அதன் பிறகு உள்ளே செல்லாமல் வெளியிலே வரும். அப்படி வருவதை சேஷமாக சங்கத்திலே எடுத்து, நம் மிடம் பிரஸாதமாகக் கொடுத்துவிடு வார்கள்.

சின்னஞ்சிறு குடத்திலே நைவேத்யம் கரைத்து வைத் தாலும் பாதி; பெரிய சங் காளத்திலே நிவேதனம் பண் ணினாலும் பாதிதான் ஸ்வீகரிப்பான் எம் பெருமான்.

"அர்தம் தாஸ்யாமி - பாதி கொடுக் கிறேன்; பாதி நான் எடுத்துக் கொள்கிறேன்" என்கிறான் பரமாத்மா. இன்றளவும் பானக சகதியாக இருக்கும் படியான அந்த இடத்திலே ஒரு ஈ - எறும்பு கூட வராது. ஆகையினாலே பகவானுக்கு நிவேதனம் பண்ண வேண்டிய பானகத்தில் ஒரு ஈ - எறும்பு இருக்காது. ஆனால், நிவேதனம் பண்ணி எடுத்துவந்த பிற்பாடு அதிலே ஈ - எறும்பு மொய்க்கும்!



சாமானிய ஜந்துக்களெல்லாம்கூட "இது நிவேதனம் பண்ணிய பதார்த்தம்; இது நிவேதனம் பண்ணாதது" என்று ஈடு படுகிற ஒரு க்ஷேத்திரம் இந்த மங்களகிரி. அப்படியானால் அந்த க்ஷேத்திரத்தின் பெருமையை என்னவென்பது!

அஹோபில மடத்திலே டோலோத்ஸவத்துக்கு (ஊஞ்சல் உத்ஸவம்) எழுந்தருள்கிறான் கிருஷ்ணன். அழகிய சிங்கரோடு, அந்த கிருஷ்ணனுக்குப் பக்கத்திலே, மாலோலனுக்குக் கீழே, அந்த வெள்ளி மண்டபத்திலே எழுந்தருளியிருக்கிறான் ஒரு நரசிம்ஹன். அவன் யாரென்றால், மங்களகிரி லக்ஷ்மிநரசிம்ஹன்தான். பானக ஆராதனம் அங்கே சாயங்கால வேளையிலே நடக்கிறது. பானகமானது நிவேதனம் பண்ணப் படுகிறது.

யுகந்தோறும் அவனை வணங்கியவர்களெல்லாம் ஒவ்வொரு பதார்த்தத்தை நிவேதனம் பண்ணிக் கொண்டிருந் தார்கள்.

பாசுபதாஸ்திரத்தைப் பெற்ற அர்ஜுனன் தியானம் பண்ணிய மலை விஜயவாடாவிலே இருக்கிறது. அந்த மலையை இன்னமும் நாம் ஸேவிக்கலாம். கனகதுர்கா அங்கே அந்த மலையருகே எழுந்தருளியிருக்கிறாள்.

மங்களகிரியோ பீமனால் ஆராதிக்கப்பட்ட க்ஷேத்திரம்.

அடியேன் தாயார் வேடிக்கையாக ஒரு நாள் சொன்னார் : "இந்த ஊருக்கு 'விஜயவாடா' என்று ஏன் பெயர் வந்தது என்றால், தபஸ் பண்ணுவதற்காக மலை மேலே ஏறினான் அர்ஜுனன். ரொம்ப நாழி ஆனபிறகு தம்பி வரவில்லையே என்று தர்மபுத்திரன் அவனை "விஜயா! வாடா!" என்று கூப்பிட்டார். அதனால் விஜயவாடா என்று பெயராயிற்று."

உடனே அடியேன் கேட்டேன் என் தாயாரை : "அது ஆந்திர தேசமாச்சே... தர்மபுத்ரர் தமிழிலா பேசினார்?" என்று.

இந்த விஷயத்தின் ரசோக்தியை நாம் உணர வேண்டும் என்பதற்காக இதைச் சொன்னேன்.

அந்த மாதிரி விஜயன் தபஸ் பண்ணிய இடத்தை அங்கே இன்னமும் பார்க்கலாம். அந்த இடத்தைத் தாண்டித் தான் நாம் மட்டபல்லிக்கே போக வேண்டும். மங்களகிரியையும் தாண்டிப் போக வேண்டும்... அப்படிப் போகையில், எதிரே மலையும் அதனருகே கிருஷ்ணா நதி தீரமுமாக அந்த கேதவரம் எம்பெருமான் லக்ஷ்மிநரசிம்ஹன் எழுந்தருளியிருக்கிறான்.

இந்த ஐந்து க்ஷேத்திரங்களும் (மங்களகிரி, வேதாத்ரி, வாடபல்லி, கேதவரம், மட்டபல்லி) பரம், வியூகம், விபவம், ஹார்தம், அர்ச்சை என்று ஐந்து நிலைகளைக் குறிக்கிற க்ஷேத்திரங்கள்.

ஆண்டாள் இந்த ஐந்து நிலைகளைப் பாடியிருக்கிறாள். 'மார்கழி திங்கள்', 'வையத்து', 'ஓங்கி உலகளந்த', 'ஆழி மழைக்கண்ணா', 'மாயனை மன்னும்' ஆகிய ஐந்து பாசுரங்களிலே இந்த ஐந்து நிலைகளைக் காட்டினாள். பஞ்ச நரசிம்ஹ க்ஷேத்திரங்களில் இந்த ஐந்து நிலைகளும் இருக்கின்றன.

பரம் என்பதை உயர்ந்த மங்களகிரி க்ஷேத்ரத்திலே நாம்

## வாரியார் அமுதம்

'**ம**னிதன்' என்ற சொல்லுக்கு நினைப்பவன் என்பது பொருள். நினைக்கும் கருவி மனம். மனத்தையுடையவன் மனிதன்.

**த**மிழில் மனிதன், வடமொழியில் மநுஜா, ஆங்கிலத்தில் மேன். இவையெல்லாம் 'மன்' என்ற பகுதியடியாகவே பிறந்தவை.

**வி**த்துக்களெல்லாம் காலம் தவறி விதைத்தால் முளைக்காது. முளைத்தாலும் பயன் தராது.

**ஆ**சையெனும் வித்தானது, எந்தக் காலத்தில் எந்தச் சமயத்தில் போட்டாலும் முளைத்துவிடும். மறு பிறவியைக் கொடுத்துவிடும்.



பார்க்கலாம்.

வியூகம் என்பதை வேதாத்ரி க்ஷேத்திரத்தில் பார்க்கலாம்.

விபவம் என்பது, உயர்ந்ததாக இருக்கும்படியான வாடபல்லி க்ஷேத்திரத்திலே காணக் கிடைக்கிறது.

ஹார்தம் என்பது கேதவரத்திலே.

அர்ச்சை என்பது மட்டபல்லி க்ஷேத்திரத்திலே.

இந்த ஐந்து நிலைகளும் ஐந்து நரசிம்ஹ க்ஷேத்திரங்களில் அழகாக அமைந்திருக்கின்றன.

நமக்குள்ளே ஐந்து கோசங்கள் அமைந்திருக்கின்றன: அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞான மயகோசம், ஆனந்தமய கோசம். இந்த ஐந்திலும் சுத்தி ஏற்பட்டால் தான் எம்பெருமானை நாம் உணர முடியும். இந்த ஐந்து க்ஷேத்திரங்களிலேயும் இருக்கும்படியான நரசிம்ஹனை உபாஸனை பண்ணினால் சிறந்தது.

அன்னமய கோசத்தில் சுத்தி ஏற்பட மங்களகிரி நரசிம்ஹனை தியானம் பண்ணவேண்டும். அடுத்து, பிராணமய கோசத்தில் சுத்தி ஏற்பட வேதாத்ரி நரசிம்ஹனை தியானம் பண்ணவேண்டும். மனோமய கோசத்தில் சுத்தி ஏற்பட மட்டபல்லி லக்ஷ்மி நரசிம்ஹனை தியானம் பண்ண வேண்டும். விஞ்ஞானமயகோசத்தில் சுத்தி உண்டாக வாடபல்லி லக்ஷ்மி நரசிம்ஹனை தியானம் பண்ணவேண்டும். ஆனந்தமயகோசத்தில் சுத்தி பெற கேதவரம் லக்ஷ்மி நரசிம்ஹனை தியானம் பண்ண வேண்டும்.

இந்த ஐந்து க்ஷேத்திரங்களிலும் நரசிம்ஹனை தியானம் பண்ண, இந்த ஐந்து நிலைகளிலும் சுத்தி ஏற்படும்; தெளிந்த ஞானம் பிறக்கும். பகவானை அனுபவிக்கும்படியான நிலையை நாம் அடைவோம்.

(வளரும்)

நான்கு வாரத் தொடர்

# காதல் சதுரங்கம்!

**கா**ல் டாக்சியிலிருந்து இறங்கிய சண்முகம் பணத்தை எண்ணிக் கொடுத்தார். டிரைவர் சரிபார்த்தபின் காருக்குள் மலங்க மலங்க விழித்துக் கொண்டிருந்த மல்லிகாவைப் பார்த்து "எறங்கு மல்லி" என்றார். ஆனால் அவள் அப்படியேதான் அமர்ந்திருந்தாள். டிரைவர் பின்புறம் திரும்பிக் கதவைத் திறந்துவிட, சண்முகம் கைப்பிடித்து மல்லிகாவைக் கீழிறக்கி நடத்திக் கூட்டிக்கொண்டு போனார். அவர் வீடு வரை கார் வர முடியாது. பாதை சரியில்லை. வீட்டை நெருங்குவதற்குள் அவரை நெருங்கிவிட்டார் பக்கத்து வீட்டு சிவநேசன்.

"என்ன சண்முகம் சார், இப்பத்தான் திருச்சிலேர்ந்து வர்றீங்களா?" என்றவர், பின்னால் வந்த மல்லிகாவைப் பார்த்துக் குழப்பத்துடன், "யாரு இது?" என்று நெற்றியைச் சுருக்கினார்.

சண்முகத்துக்கு ஒரு நிமிடம் என்ன சொல்வதென்றே தெரியவில்லை. "அது வந்து..." என்று இழுத்தவர் "சொந்தக்காரங்க... தூரத்து ரிலேஷன்" என்றார். அதற்குள் வியர்த்துவிட்டது. சிவநேசன் அடுத்த கேள்வியைக் கேட்காமல், பார்வையாலேயே உணர்த்தினார். சட்டென்று தன் கைப்பிடிக்குள்ளிருந்த மல்லிகாவின் கரங்களை விட்டுவிட்டு முன்னே நடந்தார் சண்முகம். மல்லிகா அப்படியே நின்றுவிட, சிவநேசன் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே போனார். சண்முகத்துக்கு ஒரு மாதிரியாகிவிட்டது. சிவநேசன் போய்விட்டாரா என்று பார்த்துக்கொண்டு திரும்ப வந்து மல்லிகாவை அழைத்துக் கொண்டு வீட்டினுள் நுழைந்தார்.



# மு.மாறன்

ஏதோ அந்நிய தேசத்துக்குள் நுழைந்துவிட்ட மாதிரி கலவரமாக இருந்த மல்லிகாவிடம் "என்ன அப்படிப் பார்க்கற? நீ வாழ்ந்திருக்க வேண்டிய வீடு தான்... பயப்படாம உக்காரு" என்றார். கேட்காமல் நின்றவளைக் கைப்பிடித்து உட்கார வைத்து அவளையே பார்த்தார். 'அடிக்கடி சிரிச்சா பைத்தியம்னு சொல் வாங்க... நீங்கதானே சிரிக்கிறீங்க... நான் எப்படிங்க பைத்தியமானேன்?' என்று காதலித்த கணமொன்றில் தன்னைப் பார்த்து மல்லிகா பேசியது நினைவுக்கு வர, சண்முகத்துக்குக் கண்கள் பனித்தன.



"உயிருக்குயிரா காத லிச்சிட்டு, வீட்ல ஒப் புக்கலேன்னதும் நீங்க அவள ரயிலடிக்கு வரச் சொல்லிட்டு ஏமாத்திட்டுப் போயிட்டீங்க. அப் புறம் அவ சவம் மாதிரி தான் வாழ்ந்துட்டு வந்தா. பொண்ணு படி தாண்டின அதிர்ச்சியில அவ அப்பாவும் போய்ச் சேர்ந்துட்டார். கொஞ்ச நாள் கழிச்சு அவளுக்குக் கல் யாணம் பண்ணி வச்சேன். அங்கயும் போய் சதா உங்க ஞாபகத்துலயே இருந்ததால, புருஷன்காரனுக்கு விஷயம் தெரிஞ்சு துரத்திட்டான். எல்லாம் சேர்ந்து அவளுக்குச் சித்த பிரம்ம பிடிக்க வச்சுட்டுது. இந்த இருபது வருஷத்துல எல்லா எடத்துலயும் காட்டிட்டேன்... குணமாகற வழியைத்தான் காணோம்."




அறுபத்தைந்து வயதிலும் மல்லிகா வின் அம்மா கோர்வையாகப் பேசிய போது சண்முகம் உயிரோடு எரிந்தார். தனக்குக் காதும் கண்களும் இருந்ததற் காக அவர் வருத்தப்பட்ட தினம் அது. எங்கோ வெறித்துப் பார்த்துக்கொண்டு, தான் வந்ததே தெரியாமல் ஓரமாய் உட்கார்ந்து கொண்டிருந்தாள் மல்லிகா. எழுந்து அவளிடம் சென்று "மல்லி" என்றார். நிமிர்ந்து பார்த்துவிட்டு மறுபடி எங்கோ வெறிக்க ஆரம்பித்துவிட்டாள். சண்முகத்துக்குப் 'பொலபொல'வென கண்ணீர் வழிய ஆரம்பித்துவிட்டது. சிலையென அப்படியே நின்றுவிட்டார். தன்னால்தானே எல்லாமென்கிற குமைச்சல் அவரை வாட்டி வதைத்தது.

"ஆச்சு. இன்னும் அஞ்சு வருஷமோ, பத்து வருஷமோ... என் ஆயுள் முடியப் போகுது. அதுக்கப்புறம் இவ கதிய நினைச்சாத்தான் கதி கலங்குது. நல்ல வங்களே தனியா வாழ முடியாத உல கத்துல புத்தி பேதலிச்சவ என்னவாகப் போறாளோ?" ஆற்றாமையோடு அந்தத் தாய் பேசப் பேச, சண்முகத்தால் தாங் கவே முடியவில்லை.

"நீங்க கவலைப்படாதீங்க. மெட்ராஸ் கூட்டிட்டுப் போய் நான் மல்லிகாவைப் பத்ரமா பாத்துக்குறேன்" என்று எதையும் யோசிக்காமல் கூறிவிட்டார்.

ஆனால் அந்த அம்மாள் யோசித் தாள்.

"உண்மையச் சொல்லணும். இத்தனை நாள் இல்லாம இப்ப மட்டும் ஏன் இவளப் பார்க்க வந்தீங்க?"

சண்முகம் சற்று நேரம் அமைதியாகி விட்டார். பின்பு சொன்னார்.

"வரலேங்கிறதுக்காக இவளை மறந்துட்டேன்னு அர்த்தமில்ல. ஒரு நாளும் இவளை நினைக்காம இருந்ததில்ல. ஆனா என் மனைவிக்கு நான் துரோகம் பண்ண முடியலை. அவ தங்கம். ஆரம்பத்துல மல்லிகாவுக்குப் பதிலா வந்தவன்னு எனக்கு அவளை பிடிக்கலதான். ஆனா பொறுமையா காத்திருந்து தன்னை ஏத்துக்க வச்சா. அன்பால என்னைத் திணறடிச்சா. அவ இருந்தவரைக்கும் எனக்கு மல்லிகாவப்பத்தி ஞாபகம் வருமே ஒழிய, வந்து பார்க்கணும்னு தோணினதில்ல. ரெண்டு வருஷத்துக்கு முன்னாடிதான் நோய்வாய்ப்பட்டு இறந்தா. ஏற்கெனவே என் பொண்ணுக்குக் கல்யாணமாயிடுச்சு. போன மாசம்தான் பையனும் கல்யாணமாகி அமெரிக்கால செட்டிலானான். கடமைகள் எல்லாம் முடிஞ்சு நிமிர்ந்து பார்த்தா, என்னமோ வாழ்க்கை வெறுமையா இருந்துச்சு. நிலையில்லாத வாழ்வுல எப்ப வேணா, என்ன வேணா நடக்கலாம். போகும்போது குற்ற உணர்ச்சி இல்லாம போகணும்னு நெனைச்சேன்... நான் வாழ்க்கைல செஞ்ச ஒரே தவறு, மல்லிகாவைக் கைவிட்டதுதான். அவ என்னை மன்னிச்சா போதும்னு தோணுச்சு... புறப்பட்டு வந்துட்டேன்."

"மல்லிகாவைக் கூட்டிட்டுப் போய் வச்சுப் பாதுகாப்பேன்னு சொல்றதைக் கேட்க எனக்கு நிம்மதியாத்தான் இருக்கு. ஆனா உங்க பொண்ணு, பையன்லாம் கேள்வி கேக்க மாட்டாங்களா? மனநிலை பாதிச்ச பிறகும் கூடவா என் பொண்ணுக்குத் துன்பங்கள் தொடரணும்?"

"இதுல துன்பத்துக்கு இடமே இல்லம்மா. என் பொண்ணு, பையன்லாம் என்னைப் புரிஞ்சவங்க. நான் பாத்துப்பேன்."

"கேக்க நல்லாத்தான் இருக்கு. ஆனா நடைமுறைன்னு ஒண்ணு இருக்கே... நாலு பேர் உங்க நடத்தை மேல சந்தேகப்படும்போது ஏன்டா கூட்டிட்டு வந்தோம்னு ஆய்டும்."

"ஊர் ஆயிரம் பேசும்... அதுக்கென்ன தெரியும் மனங்களைப் பத்தி?"

"கிடக்கட்டும், அவ மனநிலை சரியில்லாதவ. பார்த்துக்க தனித் தெம்பு வேணும். பெரிய மனசு வேணும்."

"எனக்கு இல்லங்கறீங்களா?"

"இப்போதைக்கு இருக்கலாம். ஆனா எப்பவும் இருக்குமா?"

"அனுப்ப வேண்டாம்னு முடிவு பண்ணிப் பேசறவங்ககிட்ட நான் என்ன சொல்றது?"

"அவ பொண்ணுப்பா, அதுவும் சித்தம் கலங்கினவ... அதான் இவ்ளோ பேசறேன்."



"என்னை நம்புங்கம்மா, உங்க பொண்ணைத் தாங்குவேன். வேணும்னா நீங்களும் அவகூட வந்து ஒரு மாசம் தங்குங்க. உங்களுக்குப் பிடிச்சிருந்தா, என்னை நம்பி அவளை விட்டுட்டுப் போங்க. என்ன சொல்றீங்க?"

இந்த யோசனை அந்த அம்மாவுக்குப் பிடித்திருந்தது.

"சரி" என்றவள், "அவரோட பென்ஷன் பணம் வாங்கிட்டு நான் ரெண்டொரு நாள்ல வரேன். அட்ரஸ் கொடுத்துட்டு நீங்க அவளை கூட்டிட்டுப் போங்க. அவளுக்கு ஹிஸ்டீரியா மாதிரியெல்லாம் இல்ல. தொடர் கஷ்டங்களால ஏற்பட்ட மன அழுத்தம்தான் அவளை இப்படியாக்கிடுச்சு. ஆர்ப்பாட்டமெல்லாம் பண்ணமாட்டா. சதா வெறிச்சுப் பார்த்துட்டு, அமைதியா இருப்பா. பயப்படாம கூட்டிட்டுப் போங்க."

"அவ ரகளையே பண்ணாலும் தாங்கிப்பேம்மா" என்றுதான் கூட்டி வந்தார்... வந்த இடத்தில் மூணாவது வீட்டு சிவநேசனையே அவரால் தாங்க முடியவில்லை.

சற்றைக்கெல்லாம் வேலைக்கார பெண்மணி வசந்தா வேகமாய் வந்தாள். சண்முகத்தைப் பார்த்ததும்,

"என்ன சார் இப்படிப் பண்ணிட்டீங்க" என்றாள் அழாத குறையாக, ஓரக்கண்ணால் எதையோ தேடியபடி.

"நான் என்னம்மா பண்ணேன்?"

"சிவநேசன் சாரு எல்லாத்தையும் சொல்லிட்டாரு. திருச்சிலேர்ந்து உங்க சொந்தக்காரங்க யாரையோ கூட்டிட்டு வந்திருக்கீங்களாமே... அப்ப இனிமே நான் அவ்வளோதானா?"

"என்னம்மா சொல்ற... ஒரு எழவும் புரியல..."

"எத்தனை வருஷமா நான் உங்க வீட்ல வேலை செய்றேன். திடுதிப்புன்னு யாரோ ஒரு பொம்பளய வேலைக்குக் கூட்டிட்டு வந்துட்டா அப்புறம் என் கதி?"

"சிவநேசன் சொன்னாரா அப்படி?"



"யாரோ ஒரு பொம்பள வந்திருக்குன்னு சொல்லிட்டு 'தனியா இருக்குற மனுஷனுக்குத் துணையாவும் இருக்கலாம் வேலைக்காரியாவும் இருக்கலாம்'னாரு... அதான் அவர் வீட்ல செஞ்சுக்கிட்டிருந்த வேலையைப் பாதியில நிறுத்திட்டு ஓடி வந்தேன்" என்றாள் வசந்தா.

சண்முகத்துக்கு நரம்பு புடைத்தது.

"அவ வேலைக்காரியும் இல்ல; வேற எந்தக்காரியும் இல்ல. போ, போய் உன் வேலையப் பாரு."

"ரொம்ப சந்தோஷம் சார்..." என்று கிளம்பின வசந்தா, திரும்ப வந்து, பெட்ரூமுக்குள் சென்று எட்டிப் பார்த்து,

"யார் சார் அது? உங்க சொந்தத்துல இதுவரைக்கும் நான் இவங்கள பார்த்ததில்லையே" என்றாள், சண்முகத்திடம். அவர் கத்தினார்.

"யாரா இருந்தா உனக்கென்ன..? ஒழுங்கா வேலைய மட்டும் பாரு."

அவரின் இந்த முகம் புதிது. வசந்தா மிரண்டு பின்வாங்கினாள்.

அவள் போனபின் தன்னையே நொந்து கொண்டார். 'ச்சே. நான் ஏன் இப்படிப் பதற்றப்படுகிறேன்? சிவநேசன் இவளிடம் சொன்னார். இவள் இன்னும் எத்தனை பேரிடம் சொல்லப் போகிறாளோ? ஒன்று இரண்டாகி, இரண்டு நான்காகி எல்லோரும் ஒரு மாதிரி பார்ப்பார்களோ? ஒவ்வொருத்தரிடமும் 'என் முன்னாள் காதலி' என்று ஆரம்பித்து அனைத்தையும் விளக்கிக் கொண்டிருக்கவா முடியும்? இல்லை விளக்கினால் தான் அன்பைப் புரிந்துகொண்டுவிட முடியுமா? என்ன செய்யப் போகிறேன்?' கேள்விகள் பாட்டுக்கு சண்முகத்தினுள் தொடர்ந்துகொண்டே சென்றபோது தான் அவரது செல்போன் ஒலித்தது. எடுத்தார். மறுமுனையில் பெங்களூரிலிருந்து மகள் கவிதா.

"எப்படியிருக்கீங்க அப்பா?"

அப்போதைக்குப் பிரச்னையைத் தள்ளி வைத்து, "நல்லாருக்கேம்மா. நீ, மாப்ள எல்லாம் சௌக்கியமா?" என்றார்.

"நல்லாருக்கோம்பா. பசங்களுக்கு லீவ் விட்டாச்சு. மெட்ராஸ் வர்றேன். கூட என் மாமியாரும் வர்றாங்க."

சண்முகத்துக்கு மண்டையில் இடி இடித்தது.

"என்னப்பா... பேச்சையே காணோம்..?"

"வா... வாங்கம்மா, எப்போ வர்றீங்க?"

"நாளைக் கழிச்சு மறுநாள். நேர்ல வந்தப்புறம் மத்ததெல்லாம் பேசறேன். வைக்கறேம்பா, உடம்ப பார்த்துக்கங்க." வைத்துவிட்டாள்.

சண்முகம் செல்லை ஆஃப் செய்யத் தோன்றாமல் அப்படியே நின்றிருந்தார்.

(தொடரும்)

'பாஞ்சாலி பையனோ' மத்தியானத்திலிருந்து 'தம்' அடித்துக் கொண்டு மைதானத்தில் கிரிக்கெட் ஆடிக் கொண்டிருக்க, துச்சாதனன் அங்கேயே ஓடி கூந்தலைப் பிடித்துக் கவனமாக இழுத்துக்கொண்டு ஓடி வந்தான்.

சபதக் காட்சியில் அர்ச்சுனனாக நடித்த மாணவர், 'தருமத்தின் வாழ்வுதனை சூது கவ்வும்' என்ற வசனத்தைப் பேசிக் காண்டீபமாகிய தன் வில்லின்மீது ஆணை இட வேண்டும். ஆனால் வில் ஒன்றும் கிடைக்காததால், ஏதோ ஒரு உண்டிவில்லைத் தோளில் மாட்டிக் கொண்டு வந்துவிட்டார். அதை நாங்களும் கவனிக்கவில்லை. அதனால் என்ன! இவர்தான் வில்லைப் பயன்படுத்தவில்லையே என்று மகிழ்ந்திருந்தோம்.

ஒரு நாள் சினிமாமணி விட்டு மாடியில் எங்கள் குழுவோடு நாங்கள் அமர்ந்து அடுத்து என்ன செய்வது என்று பேசிக் கொண்டிருந்தோம்.

மக்கள் திலகம் எம்ஜி.ஆர். அவர்கள் எங்கள் ஊருக்குத் தேர்தல் பிரசாரத்திற்காக வரப்போவதாக முத்துராக்கு 'வேர்க்க விறுவிறுக்க' வந்து சொன்னார். 'தம்பி, அவரை எப்படியாவது ஒரு தடவையாவது கிட்டப்போயி நின்னு தொட்டுப் பார்த்திரணும்'' என்று ஏக்கத்தோடு சொன்னார்.

எங்களுக்கும் அந்த எண்ணம் உண்டு. இருந்தாலும் அது நடக்குமா என்று தெரியவில்லை. அதற்குள் முத்துராக்கு, "தம்பி, ஒரு கதாநாயகன் எப்படி இருக்கணும்ங்கிறதுக்கு அவர்தான் எடுத்துக் காட்டு. என்னா உடல்கட்டு. என்னா சிவப்பு தெரியுமா? அது மட்டுமில்ல தம்பிகளா, எதையும்





## சினிமாவுக்குப் போகலாம் வாங்க!

**கு.ஞானசம்பந்தன்**

நுணுக்கமா சிந்திப்பாரு. 'மர்மயோகி'ன்னு ஒரு படம். அதுல ஒரு வசனத்தை அடிக்கடி பேசுவாரு. 'கரிகாலன் குறிவைக்க மாட்டான், குறி வைத்தால் தவறமாட்டான்'ன்னு சொல்லி குறுவாளை எறிவார் பாருங்க, எதிரி செத்தான்'' என்றார்.

''அதுதான் அந்தக் காலத்தில் சுவையாகச் சொல்லிப் பழகியவர் பாருங்கள், அதனால் அவர் பாணியறிந்து நாங்களும் ஆவலாய் அவர் பேசக் கேட்டோம்...

'தம்பிகளா, நம்ம தமிழ்நாட்டுச் சனங்களுக்கு எப்பவுமே சினிமால வர்ற கதாநாயகர்கள் மீது மதிப்பும், மோகமும் அதிகம். அதுலயும் மக்கள் திலகம் எம்.ஜி.ஆர். அப்பிடின்னா கேக்கவே வேண்டாம். குறிப்பாச் சொல்லணும்னா ஏழை மக்கள், ரிக்ஷாத் தொழிலாளிகள் இவர்களுக்கெல்லாம் எம்.ஜி.ஆர். தெய்வம் மாதிரி. ஒரு கிராமத்து தியேட்டர்ல 'சர்வாதிகாரி' படம் ஓடுது. நம்ம எம்.ஜி.ஆர்.தான் கதாநாயகன்; வில்லன் நம்பியார். ஒருநாள் படம் பார்க்க நரிக்குறவர் கூட்டம் ஒண்ணு சந்தோஷமா வந்திருக்கு. அவங்க எப்பவும்போல தோள்ல குருவி சுடுற துப்பாக்கி, உண்டிவில்னு குடும்பம் குட்டியா உட்கார்ந்து படம் பார்த்துக்கிட்டு இருந்தாங்களா? கடைசி சீன்ல கதாநாயகன் எம்.ஜி.ஆர். எப்பவும்போல தோள்ல கதாநாயகியைத் தூக்கிப் போட்டுக்கிட்டு ரெண்டு கையேலயும் கத்தி வச்சுக்கிட்டுப் பம்பரமாச் சுத்தி

# துப்பாக்கி கையில் எடுத்து...

'பஞ்ச்' டயலாக் போல'' என்றான் மணி.

''அது மட்டுமில்லை தம்பி, ஒரு காட்சியில சர்வாதிகாரியா நடிக்கும் அஞ்சலி தேவி மேலே கத்திய மாடியிலிருந்து வீச, அந்தம்மா சட்டென்று விலக, குறுங்கத்தி அவங்க சிம்மாசனத்தில் 'சதக்'கென்று பாயும். அதை எப்படி படம் பிடிச்சாங்க தெரியுமா?

முதல்லயே கத்திய அந்த சிம்மாசனத்தில் பதிய வச்சாங்களாம்! அந்தம்மா அதான் அஞ்சலிதேவி அந்தக் கத்தியை மறைக்கிற மாதிரி உட்கார்ந்து கொண்டு 'சட்' டென்று விலக, கத்தி பதிஞ்சிருக்குமாம். இந்த யோசனையைச் சொன்னவரே எம்.ஜி.ஆர்.தானாம், தம்பி'' என்று சொன்னார் முத்துராக்கு.

முத்துராக்கு எந்தச் செய்தியையும்



எதிரிகளைப் பந்தாடுறாரு, தியேட்டர்ல விசிலு பறக்குது. எம்.ஜி.ஆர். கீழ நின்னு கத்தி அடிக்கிறப்ப, அரண்மனை மேல இருந்து வில்லன் நம்பியார் கத்தியக் குறி வச்சுட்டாரு. யாரு மேலே தெரியுமா?"

"நம்ப எம்.ஜி.ஆர் மேலே"- சிவனாண்டி ஆக்ரோஷமாகக் கத்தினான்.

"இதப் பாத்துக்கிட்டு இருந்த நரிக்குறவர் கூட்டத் தலைவர் 'சட்டு'னு தன் தோள்ல இருந்த துப்பாக்கிய எடுத்து நம்பியாரைக் குறி வச்சுட்டாரு. நம்பியார் கத்திய எறிஞ்சார் பாருங்க, 'டுமீல்'னு ஒரு சுடு. தியேட்டர் திரை ரெண்டாக் கிழிஞ்சு போய் எம்.ஜி.ஆர். ஒரு பக்கமும், நம்பியார் ஒரு பக்கமும் போய்ட்டாங்க தியேட்டர்ல ஒரே ரகளை. ஜனங்க படம் பார்க்கிறப்ப எப்படி படத்து குள்ளேயே போய் ரசிக்கிறாங்க, பாத்தீ களா?" என்று ஆச்சரியமான செய்தியை சொல்லி முடித்தார் முத்துராக்கு.

"இந்தச் செய்தியக் கேள்விப்பட்டு எம்.ஜி.ஆரே வியந்து போனாராம். அது னாலதான் அவரோட நூறாவது பட மான 'ஒளிவிளக்கு' படத்திலே அவரு கதாநாயகி ஜெயலலிதாவும் நரிக்குறவ வேஷம் போட்டுக்கிட்டு வந்து 'நாங்க புதுசாக் கட்டிக்கிட்ட ஜோடிதானுங்க அப்படின்னு பாடி, ஆடுவாங்க" என் றான் சினிமா மணி.

"சரி, பேச்சுவாக்கிலே நான் சொன்ன விஷயத்தை மறந்திராதிங்க. மக்கள் தி கத்தை எப்படியாவது கிட்டப் போய் பாத்திரணும்" என்று முத்துராக் கண்களில் கனவுகளோடு சொன்னா

எங்களூர் சினிமா தியேட்ட மைதானத்தில் எம்.ஜி.ஆர். பேசுவதற்கா மேடை போட்டுக் கொண்டிருந்தார்க சினிமா மணியும், நானும் காலையிலே அங்கே போய்விட்டோம். கூட்ட மாலையில் தொடங்கும், எம்.ஜி.ஆர். எ போது வருவார் என்று சொல்ல மு யாது... போன்ற அரிய செய்திகளை சேகரித்தோம்.

அரைமணி நேரத்தில் சினிமாமன வழக்கப்படி தன் சுறுசுறுப்பால் அந் இடத்திலிருந்த அத்தனை பேரையும் த வசப்படுத்தினான். மேடைக்குப் பின்னா ஸ்க்ரீன் கட்டி, எங்கிருந்தோ ரெண் பெரிய ஃபேன்களைக் கொண்டு வந் சுற்றவிட்டு, சின்ன பூந்தொட்டிகளை மேடைக்கு முன்னே வைத்து அழகு செ தான். நானும் கூடவே ஓடியாடி வேலை செய்தேன்.

சற்றுநேரத்தில் நாங்கள் இல்லாவிட் டால் அந்த இடத்தில் ஒரு வேலையு ஓடாது என்கிற நிலை வந்துவிட்டது பலர் மணியிடம் வந்து யோசனை கே கத் தொடங்கினார்கள். அவனும் சளை காமல் ஒவ்வொருவருக்கும் தலா ஒ யோசனையும் சில வேலைகளும் வா. வழங்கினான். நாங்கள் எப்போது குளி தோம், எப்போது சாப்பிட்டோம் என் இன்றுவரை நினைவில் இல்லை.

(ரீல் சுற்று




## க்ளிக்குக்கு விருது!

சளைக்காமல் முப்பது வருடங்களுக்கும் மேலாகத் தமிழ் சினிமா மற்றும் பல்வேறு துறைகளிலுள்ள கலைஞர்களின் சாதனைகளை கௌரவப்படுத்தி விருது வழங்கி வருகிறது தமிழ் சினிமா கலை மன்றம். கானா உலகநாதன், நடிகர் அம்சவர்தன், இயக்குநர் ஷக்தி சிதம்பரம், பாடகி சைந்தவி, பாடகர் வெங்கட் பிரபு என வளரும் கலைஞர்கள் பலருக்கும் விருது வழங்கியுள்ளனர். இந்த வரிசையில் கல்கி குழும இதழ்களின் பிரதான புகைப் படக் கலைஞரான ஸ்ரீஹரிக்கு கடந்த வாரம் சிறந்த பத்திரிகை புகைப்படக் கலைஞர் விருது வழங்கப்பட்டது. புகைபடத்துறையில் பத்தாண்டு அனுபவமுள்ள ஸ்ரீஹரியின் கேமராவில் சிக்காத அரசியல் தலைவர்களே இல்லை!

நேர்முகத் தேர்வில் அந்த இளைஞனிடம் நெத்தியடியாக ஒரு கேள்வி கேட்கப்பட்டது. "ஒரு பெரிய கம்பெனியில் உனக்கொரு வேலை. சம்பளம் குறைவுதான். அதேசமயம் இன்னொரு கம்பெனியில் கை நிறையச் சம்பளம். ஆனால் வேலையும் அந்தச் சூழலும் உனக்கு ஒத்து வராது. இரண்டில் எதைத் தேர்வு செய்வாய்?"

டை கட்டிய ஆசாமிகள் மிடுக்குடன் எதிரே அமர்ந்துகொண்டு கேட்கிறார்கள். இரண்டு விரல்களில் ஒன்றைத் தொடு என்பது போன்ற சிக்கல். ஆனால் பொட்டில் அடித்த மாதிரி சொன்னான் அந்த இளைஞன்.

"இரண்டு வேலையும் எனக்கு வேண்டாம். என் தகுதிக்குக் குறைவான சம்பளத்தையும், சூழல் ஒத்து வராத வேலையையும் வைத்துக்கொண்டு என்னால் முன்னேற முடியாது."

டை ஆபீசர்கள் ஒருவரையொருவர் பார்த்துப் புன்முறுவல் செய்துகொண்டு, அந்த இளைஞனுக்கு 'டிக்' அடித்தனர். இளைஞனிடம் தென்பட்ட நேர்மையே அவனுக்கு வேலை வாங்கித் தந்திருக்கிறது.

"அவ்வளவுதான் நேர்முகத் தேர்வு என்பது. வியர்த்து ஒழுக வேண்டாம். படபடப்பும்... கொஞ்சம் திறமை, கொஞ்சம் நாவன்மை. கையில் லட்டுபோல வேலை" என்கிறார் 'சென்டர் ஃபார் கம்யூனிகேஷன் எக்ஸலன்ஸ் இயக்குநர் கீதா சங்கர். மனிதவள மேம்பாட்டுத் துறையில் ஈடுபட்டுக் கொண்டு, பல கம்பெனிகளுக்கும் வேலை தேடும் இளைஞர்களுக்கும் புதிய பாதை போட்டுக் கொடுக்கிறார் இவர். "எப்பேர்ப்பட்ட இண்டர்வியூவாக இருந்தாலும் 'ப்பூ' என்று ஊதிவிடலாம்" என்றபடி டிப்ஸ்களை வழங்க ஆரம்பித்தார்.

# "நேர்மைதான்

**பயோடேட்டா**

இதன் மாடலை இண்டர்நெட்டிலிருந்தெல்லாம் சுமா, ஃபுல்ஸ்டாப் வரை ஒத்தி எடுக்கக்கூடாது. போட்டிக்கு நாவல் எழுதி அனுப்புவதுபோல பக்கம் பக்கமாகவும் தயாரிக்கக் கூடாது. குறைந்த வார்த்தைகளில் உங்களைப் பற்றிய விவரங்களைச் சொன்னால் போதும் (கவனம் - நீங்கள் எழுதுகிற இந்த பயோடேட்டாவை வைத்துத்தான் நேர்முகத் தேர்வில் கேள்விகள் கேட்கப்படும்) பள்ளி, கல்லூரிகளில் நடந்த விழாக்களுக்குத் தலைமை வகித்த அனுபவம், இன்ன பிற ஏதேனும் இருப்பின் அந்த விவரங்களைச் சேர்ப்பது அவசியம். இந்தச் சான்றுகள் உங்களுடைய லீடர்ஷிப் குவாலிட்டியை நிரூ

பணம் செய்யும். 'நான் உங்களுடைய கம்பெனியை முதுகில் சுமப்பேன் என்று உளமார உறுதி கூறுகிறேன்' போன்ற 'வள வளா' வாக்கியங்கள் தேவையற்றவை.

### க்ரூப் டிஸ்கஷன்

பயோடேட்டாவை அனுப்பிய பிறகு எழுத்துத் தேர்வு நடைபெறும். அதில் தேர்வான பின்பு குழு விவாதம். உங்களுடைய நாவன்மையை இங்குதான் காண்பிக்க வேண்டும். நீங்கள் சொல்லும் கருத்தை எதிராளியும் ஏற்றுக்கொள்ள வேண்டும். பேசுகிற விஷயத்தில் தெள்ளத் தெளிவாக இருக்க, அறிவைப் பெருக்


• கீதா சங்கர்

# வெற்றியின் ரகசியம்!"

கிக் கொள்ள வேண்டும்.

### நேர்முகத் தேர்வு

இதுதான் க்ளைமாக்ஸ். நேர்முகத் தேர்வுக்கு அழைப்பு வந்தவுடன் குல தெய்வத்துக்கு அப்ளிகேஷன் போட்டு விட்டு, சாவகாசமாக இருந்துவிட வேண்டாம். முதலில் மனதளவில் தைரிய இஞ்சக்ஷனை ஏற்றிக்கொள்ள வேண்டும்.

'வெற்றி நமதே' என்கிற மந்திரத்தை ஓயாமல் மனதோடு உச்சரிக்க வேண்டும். இந்தப் பயிற்சியே புது உற்சாகம் தரும். எந்த நேர்முகத் தேர்வும் தமிழில் நடத்தப்படுவது கிடையாது. ஆங்கிலம் இன்று வியாபார மொழியாகிவிட்டதால், ஆங்கிலத்தில் தொடர்புகொள்ளும் திறமை எல்லா வேலை தேடும் இளைஞர்களுக்கும் இருக்க வேண்டிய கட்டாயத் தகுதியாகிவிட்டது. கல்லூரிப் படிப்பு முடிக்கும்வரை ஆங்கிலம் சரளமாகப் பேச வராவிட்டால் ஒன்றும் தேச குற்றம் கிடையாது. ஆங்கிலப் பேச்சுப் பயிற்சிக்காக 20 மணி நேர கோர்ஸ் ஒன்று எங்களிடம் உண்டு. வாரம் மூன்று மணி நேரம் என ஏழு வாரங்களுக்கு. யோசிப்பதுகூட ஆங்கிலத்திலே இருந்தால் தங்கு தடையின்றி பேச முடியும். இண்டர்வியூவில் உங்களிடம் உண்மையை மட்டுமே எதிர்பார்ப்பார்கள். பொய் சொல்லி மாட்டிக் கொள்வதைவிட 'தெரியாது' என்று சொல்லும் உண்மை மட்டுமே வேலைக்கு உத்தரவாதம் தரும். அறிவு, மதிப்பெண்களைக் காட்டிலும் உங்களுடைய நடத்தைக்குத்தான் மிகவும் முக்கியத்துவம் கொடுப்பார்கள். நேர்மையாக நடந்துகொண்டாலே போதும்... வேலை அந்த இடத்திலேயே உறுதியாகி வீட்டுக்கு ஜாங்கிரியோடு செல்லலாம்'' என்று கூறும் கீதா சங்கர்,

''வேலை கிடைத்ததும் பலருக்கு கிடைத்த வேலையில் ஒட்டிக் கொண்டிருக்கத் தோன்றுகிறதே தவிர, தம்மை மேம்படுத்திக்கொள்ளத் தவறிவிடுகிறார்கள். பணிபுரிகிற இடத்தில் அனுசரித்துச் செல்வது, நேர நிர்வாகம், ஆளுமைத் திறன், தனித் தகுதிகளை மேம்படுத்துதல் என்று ஒரு நபரின் வளர்ச்சிக்கான காரணிகள் ஆயிரம் இருக்கின்றன. இவற்றைக் கண்டடைவதுதான் வாழ்வின் சவால். அவற்றை நாங்கள் பயிற்சிகள் மூலம் எளிதாக்குகிறோம்'' என்கிறார்.

**- சநகன்**

ரமேஷ் ஒரு சாஃப்ட்வேர் இன்ஜினியர். அவருக்குத் திருமணம் நிச்சயமானது. கல்யாணத்துக்கு ஒரு மாதம் இருக்கும் போது மணமகளுக்குப் பிறந்தநாள் வர, ஊரிலிருக்கும் தமது வருங்கால மனைவியைப் பார்த்துப் பரிசு கொடுத்துவர, பைக்கில் புறப்பட்டார் ரமேஷ்.

கிழக்குக் கடற்கரைச் சலையில், மகிழ்ச்சியுடன் 70 கிலோமீட்டர் வேகத்தில் அவர் பயணிக்க, ஒரு வளைவில் லாரியொன்று எதிர்பாராமல் முளைத்துத் திரும்ப, ரமேஷ் சுதாரிப்பதற்குள் எல்லாம் முடிந்துவிட்டது. அதிர்ஷ்டவசமாக ரமேஷ் சிற்சில காயங்களுடன் உயிர்தப்ப, அவரின் தாடை எலும்பு நொறுங்கி, முகம் வீங்கிவிட்டது. வாய் திறக்க முடியவில்லை. முகம் கோரமாகிவிட்டது. 'ஒரு மாதத்தில் திருமணத்தை வைத்துக் கொண்டு இப்படியாகிவிட்டதே... மகனது வாழ்க்கை அவ்வளவுதானா?' என்று கண் கலங்கிவிட்டனர் ரமேஷின் பெற்றோர்.

ஆனால், ''மருத்துவம் இன்றைக்கு அபரிமிதமான வளர்ச்சியைக் கண்டுள்ளதால் ரமேஷின் பெற்றோர் கண் கலங்க வேண்டிய அவசியமில்லை'' என்கிறார் சென்னை நந்தனத்தைச் சேர்ந்த முகச் சீரமைப்பு மற்றும் பல் மருத்துவ நிபுணர் டாக்டர் செந்தில் முருகன்.

'ரமேஷின் பிரச்னையை எப்படி சரிப் படுத்தலாம்?' என்று அவரிடம் கேட்டால், மளமளவென்று வருகிறது பதில்.

''இதுபோன்று விபத்தில் அடிபட்டு முகம் காயமடையும்போது தாடை நொறுங்கியிருக்கும். வாய் திறக்க முடியாது; சாப்பிட முடியாது. மிகுந்த அவஸ்தையாக இருக்கும். இதற்கு முன்பெல்லாம் கம்பி கட்டி சிகிச்சையளித்து வந்தோம். பற்களுக்கு இடையே கம்பி விட்டு, மேல் தாடை, கீழ்த் தாடையை சேர்த்து வைத்துக் கட்டுவோம். இப்படிச் செய்வதால் நான்கைந்து வாரங்களுக்கு வாயைத் திறக்க முடியாது; உணவருந்த முடியாது.

ஆனால் இப்போது ப்ளேட்டிங் என்றாரு நவீன முறை வந்துவிட்டது. டைட்டானியம் என்றொரு மினி பிளேட் கொண்டு உடைந்த எலும்புப் பகுதியைச் சேர்த்து வைத்து ஸ்க்ரூ செய்து விடுவோம். இந்த சிகிச்சையில் எப்போதும்போல் வாய் திறக்கலாம்; மிக எளிதாகவும் குணம்

# இனி நிம்மதியா



பெறலாம். என்றாலும் இதிலும் ஒரு சின்னப் பிரச்னை உண்டு. இச்சிகிச்சையில் பொருத்தப்படும் டைட்டானியம், மெட்டல் ஆதலால், இரண்டிலிருந்து நான்கு வருடங்களுக்குள் பொருத்தப்பட்ட இடத்திலிருந்து அதனை எடுக்க நேரிடலாம்.

இப்போது இன்னும் அட்வான்ஸாக ரிசார்பபிள் பிளேட்ஸ் (Resorbable plates) வந்துவிட்டன. இவற்றை வாயிலிருந்து எடுக்கத் தேவையில்லை. நம் உடம்பில் உள்ள fluids மூலமாகத் தானாகவே இவை கரையும் தன்மை வாய்ந்தவை'' என்ற டக்டரிடம்,

'முகச்சீரமைப்பு வேறு எதெதெற்கெல்லாம் செய்யப்படுகிறது?' என்றோம்.

''குழந்தைகளுக்கு ஏற்படும் பிறவிக்

குறைபாடான உதடுப் பிளவு, அண்ணப் பிளவு போன்றவற்றுக்கு முகச் சீரமைப்பு சிகிச்சை தான் அளிக்கப்படுகிறது. கருவுற்ற காலத்தில் தாய்க்குப் போதிய ஊட்டச்சத்து இல்லாதது, வயதான பிறகு குழந்தை பெற்றுக்கொள்வது, நெருங்கிய உறவுகளுக்குள் திருமணம் செய்து கொடுப்பது போன்ற காரணங்களால்தான் இந்த அண்ணப் பிளவு, உதடுப் பிளவு போன்றவை குழந்தைகளுக்கு ஏற்படுகின்றன. இதனால் குழந்தை தாய்ப்பால் குடிக்க முடியாது. பேச்சு சரியாக வராது. முகம் விகாரமாக இருக்கும். இதற்கான சிகிச்சையாக ஐந்தாறு அறுவை சிகிச்சைகள் செய்யப்படும். முதலில், உதடுப் பிளவுக்கு சிகிச்சை. பிறகு அண்ணப் பிளவு. அப்புறம் இடுப் பெலும்பை எடுத்துப் பொருத்தும் ஒட்டறுவை சிகிச்சை என்று அறுவை பல நிலைகளில் நிகழ்த்தப்படும்.

ரிசல்ட் நன்றாக இருக்க வேண்டும் என்பதற்காகக் கவனமுடன் செய்யப்படும் இந்த சிகிச்சைகளால் குறைபாட்டையும் சரி செய்து, பெண்களின் வாழ்வில் மகிழ்ச்சியை முகச்சீரமைப்பு நிபுணர்கள் கொண்டு வருகிறார்கள்.

க்ளிப்பில் ஆரம்பிக்கும் சிகிச்சை, அறுவை வரை உள்ளது. யாருக்கு எது தேவையோ அதைச் செய்கிறோம். செலவும் மிகமிகக் குறைவுதான்'' என்ற டாக்டர் செந்தில் முருகன், ''இப்போது புதிதாக நோயாளிகளிடம் ஒரு பிரச்னையை நாங்கள் சந்திக்கிறோம். மேல் தாடை சிறியதாக



• டாக்டர் செந்தில் முருகன்



# சிரிங்க!

குழந்தைக்கு அதன் எதிர்காலத்தைச் சிறப்பாக மீட்டுத்தர முடியும்'' என்ற டாக்டர், ''முகச்சீரமைப்பு இன்றைக்குப் பல பெண்களின் வாழ்க்கையில் மறுமலர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது'' என்று பொடி வைத்துப் பேசினார். "எப்படி?'' என்றோம். சொல்லத் தொடங்கினார்.

''பெண்களுக்குத் திருமண வாழ்வு இன்றியமையாதது. இதில் முகம் பெரும் பங்கு வகிக்கிறது. பற்கள் சற்று எடுப்பாக இருந்தாலே சுயநல ஆண்களால் பெண்கள் நிராகரிக்கப்படும் நிலை இன்றைக்குக் காணப்படுகிறது. எடுப்பாக இருத்தல், தாடை சிறியதாக அல்லது பெரிதாக உள்ளது, முகம் கோணலாகக் காணப்படுவது என்று எந்தவொரு

வும் கீழ்த் தாடை பெரியதாகவும் இருக்கும்போது ஒருவருக்கு முகம் Dish face மாதிரி இருக்கும். இதற்கு Micrognathia என்று பெயர். இக்குறைபாட்டுக்கு எலும்பு விரிவாக்க சிகிச்சை மிகச் சிறந்தது. Distractor என்னும் கருவி கொண்டு தாடை எலும்பைத் தேவையான அளவுக்கு விரிவாக்கம் செய்து இக்குறைபாடு நிவர்த்தி செய்யப்படுகிறது. முன்பெல்லாம் இடுப்பிலிருந்து எலும்பு எடுத்து சிகிச்சை செய்யப்படும். இப்போது இந்த Distraction Osteogenesis என்கிற புதிய முறை வந்துவிட்டதால் எல்லாமே எளிதாகி விட்டது. நோயாளிகள் இனி நிம்மதியாகச் சிரிக்கலாம்'' என்கிறார்.

- இலாகுபாரதி

நானும் சியாமளாவும் நேரெதிர். குணங்களில் இல்லை; ரயிலில் எங்களுக்குக் கிடைத்த இருக்கைகளில். ஒரு வரிசையில் மூவர். ஒரு கணவன் மனைவிக்கும் சியாமளாவுக்குமாக எதிர்வரிசையில் இடம். என் வரிசையில் என்னோடு வேறு இரண்டு ஆண்கள்.

காலையில் இருந்தே தலைவலி. அது இன்று அதிகமாகி விடுமோ என்று ஒரு குறுகுறுப்பு. காரணம் எதிர்வரிசைப் பெண்ணின் கையில் இருந்த குழந்தை. எட்டுமாதங்கள் ஆகியிருக்கலாம். இன்னும் ஒன்றரை நாள் இதே பெட்டியில் இருந்தாக வேண்டிய கட்டாயம். குழந்தை அழுது ஆர்ப்பாட்டம் செய்து விடுமோ? அப்படியானால் பயணத்தின் இனிமை குறைந்துவிடும் தான்.

சியாமளா அந்தக் குழந்தையை வாத்சல்யத்துடன் பார்த்தாள். எங்கள் மகள் வசுந்தராவின் நினைவு வந்திருக்கக் கூடும். ஒருகாலத்தில் இப்படி இருந்த வசுந்தரா இன்று டெல்லி ஐ.ஐ.டி.யில் எம்.பி.ஏ. படித்துக்கொண்டிருக்கிறாள்.

''குழந்தை லட்சணமா இருக்கு. என்ன பேரு?'' என்றபடி குழந்தையின் புறமாகத் தன் இரு கைகளையும் நீட்டினாள் சியாமளா. எனக்குக் கொஞ்சம் வெட்கமாகவே இருந்தது. நான் எவ்வளவு சுயநலமாகச் சிந்தித்து இருக்கிறேன்!

''சரவணன்னு பேரு'' என்று கூறினாளே தவிர, குழந்தையை சியாமளாவிடம் கொடுக்க முன்வரவில்லை. ''தப்பா நினைச்சுக்காதீங்க. எங்களையும் அவன் பாட்டியையும் தவிர வேற யார் தூக்கினாலும் அழுவான்'' என்றாள்.

''அதனால் என்ன? நானும் இவனுக்கு ஒரு பாட்டிதான்'' என்று குழந்தையை வாரி எடுத்துக்கொண்டாள் சியாமளா. நோக்கம் நல்லதாக இருந்தால் யாரிடமும் உரிமை எடுத்துக் கொள்ளலாம் என்கிற வகை அவள். இதனாலேயே எனக்கும் சியாமளாவுக்கும் அவ்வப்போது உரசல்கள் வந்து வந்து போகும். தவிர, என் தாத்தா, அப்பா என்று வாழையடி வாழையாக வந்த மரபுப்படி மனைவியை 'டீ' விகுதி போட்டுக் கூப்பிடுவது எனக்குப் பழக்கமாகி விட்டது. ஆனால் 'டீ' என்பது அதிகார வெளிப்பாடு' என்பது சியாமளாவின் உறுதியான எண்ணம்.

குழந்தையைப் பற்றி அம்மாவைவிட யாரால் அறிந்து கொண்டு விட முடியும்? எதிர் வரிசைப் பெண்ணின் பய எதிர்பார்ப்பு நடந்தது. சியாமளா தூக்கிக்



கொண்டவுடன் 'ஓ'வென்று அழத் தொடங்கியது குழந்தை.

''என்னடா கண்ணா? நான் உன் பாட்டிடா செல்லம். பிஸ்கெட் தரட்டுமா? என்னங்க, அந்த க்ரீம் பிஸ்கெட் ஒண்ணை எடுங்களேன்.''

இதற்குள் குழந்தையை அந்தப் பெண் வாங்கிக்கொண்டாள். தோளில் தட்டி சமாதானப்படுத்த முயன்றாள். மெதுவாக அதன் காதில் எதையெதையோ முணுமுணுத்தாள். வீடு என்றால் இயல்பான குரலில் அவள் பாடல் வரிகளை இசைக்க, குழந்தை சமாதானமாகியிருக்கக் கூடும். ஆனால்



# தேன்மொழி

அருண் சரண்யா

சுற்றிலும் பலர் தன்னையே பார்த்துக்கொண்டிருக்க, பாடுவதில் அவளுக்கு நியாயமான தயக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும். இதைச் சரி செய்வதுபோல் தோளில் கிடத்திக் கொண்டு குழந்தையை அதிகமாகக் குலுக்கியதன் மூலமும், அவன் முதுகை அதிகமாகத் தட்டியதன் மூலமும் அமைதிப்படுத்த முயன்று கொண்டிருந்தாள்.

குழந்தையோ ஹிட்ச்காக் படத்தை விட அதிக சஸ்பென்ஸையும் திகிலையும் அளித்துக்கொண்டிருந்தது. 'வீல்' என்று அலறல். கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்து போய் ஒருவித அசாதாரணமான மௌனம். தூங்கிவிட்டானா அல்லது மூச்சு நின்றுவிட்டதா என்று யூகிக்க முடியாமல் தவிக்க வைத்துவிட்டு மீண்டும் அலறல்.

''நேத்து ராத்திரிகூட இவன் சரியாத் தூங்கலை. இப்பத் தூங்கிடுவான் பாரும்மா ராதா'' என்று குரல் கொடுத்தான் அவள் கணவன். அடடா, குரலில்தான் என்ன ஒரு பிரியம். மனைவியை 'ம்மா' போட்டு வேறு கூப்பிடுகிறான். சியாமளா இதைக் கவனிக்காமல் இருந்தால் நன்றாக இருக்கும். அந்தப் பெண்ணின் பெயர் ராதா என்றால், அவள் கணவனின் பெயர் என்னவாக இருக்கும்? உண்மைப் பெயர் தெரியும் வரை கண்ணன் என்றே வைத்துக்கொண்டால் என்ன? பொருத்தமாகத்தானே இருக்கிறது.

இதற்குள் குழந்தையைக் குலுக்கியவாறே கீழே இருந்த பெரிய பையை லாவகமாக எடுத்து, அதற்குள்ளே இருந்த பால் பவுடர், ஃப்ளாஸ்க் எல்லாவற்றையும் தனக்குப் பக்கத்தில் வைத்துக்கொண்டாள் ராதா. அதற்குமேல் பால் கரைக்கும் முயற்சியில் அவள் ஈடுபடுவதற்குள் குழந்தை தூங்கத் தொடங்கியிருந்தது. வெளியில் எடுத்து வைத்த சாதனங்களை எல்லாம் மீண்டும் பைக்குள் வைத்து பையை இருக்கைக்கு அடியில் தள்ளினாள்.

''என்னங்க, சரவணன் தூங்கத் தொடங்கிவிட்டான். ஒரு துண்டை

விரியுங்க.''

கண்ணன் சட்டென எழுந்து கொண்டான். ''பாவம்மா ராதா நீ. எதுக்கு நெருக்கி அடிச்சிக்கிட்டுக் கஷ்டப்படணும். நான் வேணா மேல் பெர்த்துக்குப் போய் உட்கார்ந்துக்கிறேன். நீ குழந்தையைப் படுக்க வெச்சிட்டு வசதியா உட்கார்ந்துக் கோம்மா.''

சியாமளா சட்டென்று என்னைப் பார்த்தாள். ஒப்பீடு தொடங்கிவிட்டது!

கண்ணன் மேல் பெர்த்தில் ஏறிக் கொண்டார். "ராதா, அந்த ஏர்பில்லோவைக் கொஞ்சம் எடுத்துக் கொடும்மா. ஊதித்தர முடியுமா? முடியலேன்னா வேண்டாம்'' எந்தவித உணர்வையும் வெளிக்காட்டாது உடலை வளைத்து நெளித்து சூட்கேஸில் இருந்த காற்றுத் தலையணையை எடுத்து ஊதிக் கொடுத்தாள்.

தன் தலைக்கு அதை வைத்துக் கொண்டு அசதியுடன் படுத்துக்கொண்டான் கண்ணன்.

மேலும் சற்றுநேரம் கடந்தது. சரவணனுக்கு விழிப்பு வந்துவிட்டது. ராதா அவன் மார்புப் பகுதியை மெல்லத் தட்டினாள். இன்னும் கொஞ்ச நேரம் தூக்கத்தைத் தொடரக்கூடும் என்ற நப்பாசை.

குழந்தையின் விழிப்பையே எதிர்பார்த்துக் கொண்டிருந்தவன்போல் "அட, சரவணாக்குட்டி எழுந்திருச்சா? பிஸ்கெட் வேணா அவனுக்குக் கொடேன்'' என்று குரல் கொடுத்தான் கண்ணன்.

''இப்ப சாப்பிட மாட்டான்ங்க. வாந்தி எடுத்திடுவான்.''

''சரிம்மா. அப்போ எனக்கு பிஸ்கெட் கொடு. அப்படியே காபிக்காரன் வந்தா ஒரு கப் காபி வாங்கு. உனக்குத்தான் ஓடும் ரயிலில் எதைக் குடித்தாலும் தலை சுத்துமே.''

பிஸ்கெட் பாக்கெட்டை அவன் மேலே நீட்டினாள். இதற்குள் சரவணனின் அடுத்த சுற்று அழுகை துவங்கிவிட்டது.

''ராதாம்மா, ஒண்ணு பண்ணு. குழந்தையைத் தூக்கிக்கிட்டுக் கொஞ்ச நேரம் டிரெயினுக்குள்ளே நட. அப்போதான் சமாதானம் ஆவான். பாவம், வீட்டிலேயே அவனை இப்படிப் பழக்கப்படுத்திட்டே.''

ராதா குழந்தையைத் தோளில் சுமந்து தட்டியபடி உள்ளுக்குள்ளேயே நடக்கத் தொடங்கினாள். கொஞ்சம் பாவமாக இருந்தது. வேற்று முகம் பாராட்டாத குழந்தை என்றால், நானோ சியாமளாவோகூட இப்படி அவனைச் சுமந்து உலாத்தி இருப்போம்.

அப்போது மேலே இருந்து குரல். ''ராதாம்மா லெமன் ரைஸ் எடுத்துக்கிட்டு வந்தியே அதைக் கொஞ்சம் கொடு. அப்படியே நீயும் சாப்பிடும்மா. நானாவது காலையிலே விருந்து சாப்பிட்டேன். நீதான் ரயிலுக்கு நேரமானதினாலே அப்படியே கிளம்பும்படி ஆயிடுச்சி. பாவம், நான் சீக்கிரமாவே சாப்பிட்டுட்டுக் குழந்தையை வாங்கிக்கறேன். அப்போ நீயும் நிம்மதியா சாப்பிடலாம்.''

'ஒரு பிளேட்டில் லெமன் ரைஸைப் போட்டுக் கணவனுக்குக் கொடுத்தாள்' என்று சுலபமாகச் சொல்லிவிடலாம். ஆனால் ஓடும் ரயிலில் குழந்தையையும் வைத்துக்கொண்டு இதைச் செய்வது எவ்வளவு சாகசமான விஷயம் என்பது செய்து பார்த்தால்தான் தெரியும்.

சற்றுநேரம் - அல்ல, கணிசமான நேரம் கழித்து கண்ணன் கீழே இறங்

---



''நான் ஒண்ணு நினைச்சா, தெய்வம் ஒண்ணு நினைக்குது...''

''அப்ப ரெண்டுமே ஒண்ணுதானே... அதுக்கு ஏன் கவலைப்படுற...?

- தஞ்சை தாமு

கினான். "இந்தத் தட்டிலேயே நீயும் சாப்பிடும்மா" என்று ராதாவிடம் அதை நீட்டிவிட்டுக் கையைக் கழுவிக் கொண்டான்.

ஒரு கையில் தட்டும், ஒரு கையில் குழந்தையுமாக அவள் காட்சிதர, குழந்தையை அவன் வாங்கிக்கொண்டான். "என்கிட்டே இவன் அழாமல் இருக்கணுமே" என்ற கவலை அவன் குரலில் தொனித்தது.

அவள் கொஞ்சம் எலுமிச்சை சாதத்தை அதே தட்டில் போட்டுக் கொண்டு சாப்பிடத் தொடங்கினாள். கண்ணன் அவள் அருகிலேயே குழந்தையுடன் அமர்ந்துகொண்டான். "இந்தக் குழந்தைகளுக்கே ஓர் உள்ளுணர்வு ராதாம்மா. அதென்னவோ அம்மான்னாதான் அதுங்களுக்கு ஒரு ஈடுபாடு. பாரு நம்ம சரவணன்கூட இப்பவே தவிக்கிறான். உன்கிட்டே வரணுமாம். நான் கூட சின்ன வயசிலே இவனை மாதிரி தான். அம்மான்னா சும்மாவா? டேய் சரவணா, ஏண்டா இப்படி அம்மாகிட்டே போறதுக்கு அலையறே?" என்றான். எனக்கொன்றும் அந்தக் குழந்தை அப்போது அப்படி அலைவதாகத் தெரியவில்லை.

இரண்டு வாய் சாப்பிட்டுவிட்டு மீதி சாதத்தை டிபன் பாக்ஸிலேயே போட்டு மூடிவிட்டு, தட்டோடு கைகழுவச் சென்றாள் ராதா. திரும்ப வந்து அவன் குழந்தையை வாங்கிக்கொண்டபோது "என்னம்மா இது, உன்னைச் சாப்பிடக் கூட விடமாட்டேன்றானே இவன்? நீ பசியோடு இருக்கிறது எனக்குக் கஷ்டமாக இருக்குது ராதாம்மா. சரவணன் தூங்கினப்புறம் நீயும் சின்னதா ஒரு தூக்கம் போடும்மா. உன் உடம்பையும் கவனிச்சுக்கணும் இல்ல? சரி, நான் கொஞ்ச நேரம் மேலே படுத்துக்கவாம்மா?" என்றான்.

அப்போது அந்தப் பகுதியைத் தாண்டிச் சென்ற ஒரு நடுத்தர வயதுப் பெண்ணின் முகபாவமும் ஆற்றாமைப் பெருமூச்சும் இதைத்தான் உணர்த்திய தாகப்பட்டது. 'மனைவியை மதிப்புடன் அழைக்கும் எவ்வளவு அன்பான கணவன்... ஹூம்!' ○



• ஜனனி ஐயர்

# ஆகா... ஆனந்தம்!

“இந்தியா என்றாலே மிகப் பெரிய மிடில் கிளாஸ் வாடிக்கையாளர் சந்தை; சிப் லேபர்; கால்-சென்டர்கள் என்று ஒரு தோற்றம் உருவாகியிருக்கிறது. அப்படியானால் இவைதான் உண்மையான இந்தியாவா? அல்ல. அதன் கலாசாரமும், மதிப்பீடுகளும், ஆழமான வேர்களும் யாருக்கும் முதன்மையானவையாகத் தெரியவில்லையே என்ற குறை என்னை உறுத்திக்கொண்டே இருந்தது. அதில் பிறந்ததுதான் ‘ஆனந்தா’ என்ற அமைப்பு!” என்கிறார், பெங்களூரைச் சேர்ந்த சுப்பு அய்யர்.

‘ஆகா, கேட்க ஆனந்தமாகத்தான் இருக்கிறது. ஆனந்தாவில் என்ன செய்யப் போகிறீர்கள்?’

“இந்திய இசை மரபு ஒன்றே வாழ்க்கையில் கொஞ்சமாவது ஆன்மிக உணர்வையும், மேன்மையான சிந்தனையையும் வளர்க்க உதவும் என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன். அதை வெறும் என்டர்டெயின்மென்ட் என்ற அளவில் நான் நினைப்பதில்லை. உலக அளவில் இந்திய இசையை உயரே கொண்டு செல்வது; திறமையை ஊக்குவிப்பது; குரு - சிஷ்ய பரம்பரை முறையை மீண்டும் உருவாக்கப் பல்கலைக்கழகங்களுடனும், வணிக அமைப்புகளுடனும் கைகோத்து இணைந்து செயல்படுவது; இந்திய இசையை ஓர் இயக்கமாக எடுத்துச் செல்வது இவையெல்லாம் ஆனந்தாவின் செயல் திட்டங்களில் அடக்கம்...”

மனிதருக்கு நிறையவே ஆசை! இவர் என்ன சபா-கிபா நடத்துகிறாரா என்று நினைக்கலாம். அல்ல... பெங்களூரில் நந்தகி சிஸ்டம்ஸ் பிரைவேட் லிமிடெட்டின் எம்.டி. மற்றும் சி.இ.ஓ. இவர்.

இவருடைய கலை ஆர்வத்தால் பிறந்ததுதான் ஆனந்தா ஃபவுண்டேஷன். போன வருடமே பெங்களூரில் முதல்விழா நடத்திவிட்டார். இந்த வருடம் ஜூலை 7, 8 தேதிகளில் சென்னை மியூசிக் அகடமி அரங்கில் விழா நடக்கிறது.

ஜனனி ஐயரின் பரதநாட்டியம் ஒரு மணி நேரம். டி.எம்.கிருஷ்ணா, பாம்பே ஜெயஸ்ரீ கச்சேரிகள். வி.வி.சுப்பிரமணியம், வி.வி.ரவி, வி.வி.எஸ்.முராரி - மூன்று வயலின் இசை.

எல்லோரும் வந்து ஆனந்தமாக இசையை ரசிக்க வேண்டும் என்கிறார் சுப்பு. ஆனந்தம் சும்மா கிடைக்கிற தென்றால் அனுபவித்துவிட்டுப் போவோமே!

- சாருகேசி



